# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

**Vol. 29.** பொருளடக்கம். **No. 10.**

தாரண௵ சித்திரைமீ ௧௨

உள்ளடக்கம் — பக்கம்

ஓம்
பரப்பிரஹ்மணே நம

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

தொகுதி 29 | தாரணஹு சித்திரைமீ கஉ | பகுதி 10
1944ஹு ஏப்ரல்மீ 13உ

## கடவுள் வணக்கம்.

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி!
மீளாமே ஆள்என்னைக் கொண்டாய் போற்றி!
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி!
ஓவாத சத்தத்து ஒலியே போற்றி!
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி!
ஆறுஅங்க நால்வேதம் ஆனாய் போற்றி!
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி!
கயிலை மலையானே போற்றி! போற்றி! (1)

ஊராகி நின்ற உலகே போற்றி!
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி!
பேராகி எங்கும் [illegible]ந்தாய் போற்றி!
பெயராது எ[illegible]சிந்தை புகுந்தாய் போற்றி!
நீராவி யான நிழலே போற்றி!
நேர்வார் ஒருவரையும் இல்லாய் போற்றி!
காராகி நின்ற முகிலே போற்றி!
கயிலை மலையானே போற்றி! போற்றி! (2)

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி!
தேவர் அறியாத தேவே போற்றி!
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி!
போகாது என்சிந்தை புகுந்தாய் போற்றி!
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி!
பற்றி உலகை விடாதாய் போற்றி!
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி!
கயிலை மலையானே போற்றி! போற்றி!




# கம்பர் திருநாள்

**ப**ங்குனி அத்த நன்னுள்! இந்நாளில்தான் தமிழ்த்தாய் மணிமுடி சூடிய திருநாள். தமிழ் மொழியும் கலையும் புத்துயிர் பெற்ற திருநாள். ஏன்? கவியரசர் கம்பர் தாம் யாத்த இராமாயண கவிதை யாரத்தை, தமிழன்னைக்கு அழகுற புனைந்த புனித நாள் அந்தப் பங்குனி அத்த நாளில் தான். இன்றைக்குச் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் 'பங்குனி யத்த நாளில்' கம்ப நாடர் இராம காதையாகிய காவியத்தை அரங்கேற்றினுர் என்று பெருமைபடக் கூடிய நன்னுள் அது! "..................................கம்ப நாடன் பண்ணிய இராமகாதை பங்குனி அத்த நாளில் கண்ணிய அரங்கர் முன்னே கவி அரங்கேற்றினுனே" என்று கம்பராமாயணம் அரங்கேற்றப் பட்ட நாளைக் குறித்துப் புலவர் ஒருவர் பாடியுள்ள செய்யுளை வைத்துக் கொண்டு தாம், கவியரசர் கம்பர் திருநாளை நாம் கொண்டாட வேண்டி யிருக்கிறது. ஆமாம்; கம்பர் பெருமான் பிறந்த நாளோ அல்லது அவர் அமரத்துவம் அடைந்த நாளோ நமக்குத் திட்டமாகக் கிடைக்காததனுல் தான், அவர் இயற்றியுள்ள சிரஞ்சீவித்துவம் வாய்ந்த அரும் பெரும் காவியமான இராமாயணம் அரங்கேற்றப்பட்ட திருநாளை, கம்பர் திருநாளாகக் கொண்டாட வேண்டிய நிலையில் நாம் இருக்கிறேம். என்ன செய்வது? நம் மூதாதையர் நிலையும் நாட்டு நிலையும் அவ்விதம் இருந்திருக்கிறது. நம் பண்டைக் கவிஞர்களையும், கலைஞர்களையும், மகான்களையும் பற்றித் திட்டமான வரலாறுகளை அறிய முடியாம லிருக்கிறேம். நாம் மட்டும் என்ன?

"அன்னியர்கள் தமிழ் மொழியை அறிந்தோர் பார்த்து
அதிசயித்து ஆசை கொள்ளும் கவியாம் கம்பன்
தன்னையிந்த தமிழுலகம் மறக்கலாமோ!
சரியாகப் போற்றுத தவறே போலும்!
என்ன விதம் எங்கிருந்தான் என்றும் கூட
ஏற்பதற்காம் சரித்திரங்கள் ஏதுமில்லை;

இன்னமும் நாம் இப்படியே இருக்கலாமோ?
இழிவன்றோ தமிழரெனும் இனத்துக் கெல்லாம்."

என்று நம் காலத்தில் ஜீவிய வந்தராய் இருக்கும் தேசியகவி—வெ. இராமலிங்கம் பிள்ளை தாய் மொழிப் புலவரைப் போற்றுத நம் பேதமைக்கு இரங்கிப் பாடியிருக்கிறார்.

நம் முன்னோர்கள் தாம் என்ன காரணத்தாலோ, கவிஞர்கள், கலைஞர்கள், மகான்களுடைய வாழ்க்கை வரலாறுகளைச் செப்பமாக எழுதி வைக்கவில்லை யென்றால், நாமும் அவ்விதம் இருப்பது நியாயமா? அவ்விதம் இருந்தால், நாம் நாட்டுப் பற்று, மொழிப் பற்று, சமயப் பற்று அற்றவர்கள் என்று பழிக்கப் படுவதுடன், புலவர்கள், புரவலர்கள், பெரியார்களைப் போற்றுத புன்மையாளர்கள் என்று அவப்பெயருக்கும் நாம் ஆளாக நேரும். இடைக்காலத்தில் இருந்த நம் முன்னோர்கள், அன்னிய அரசாங்கத் தொடர்பாலோ, அன்னிய கலை நாகரிகங்களின் மீது ஏற்பட்ட மோகத்தாலோ என்னவோ, நம் மொழி, கலை, சமயங்களின்மீது பற்றின்றி அலட்சியமாய் இருந்து வந்ததனுல்தான், மொழி வளம் குன்றியது; கலை ஞானம் அருகியது; சமய உணர்வு இல்லாதொழிந்தது. அவர்கள் செய்த தவறைத்தான் தற்கால சந்ததியாராகிய நாம் அனுபவிக்கிறோம் என்று சொல்ல வேண்டும். ஆகவே, இடைக்காலத்திலுள்ளவர்களைப் போல், நாமும் நமது நாடு, மொழி, கலை, சமயங்களின் மீது பற்றின்றி வீண் வாழ்க்கை நடத்தி வருவோமாஞல், நமது கவிகளையும், கலைஞர்களையும் மகான்களையும் வீரர்களையும் போற்றுது அலட்சியமாய் இருப்போமாஞல், நமது பிற்சந்ததியாரும் நம் கதியை அடைவார்கள் என்பது கூறுமலே அமையும்.

மேனுட்டார், தங்கள் கவிஞர்களையும், பேரறிஞர்களையும், வீரர்களையும், மகான்களையும் போற்றி வருகிறார்கள். ஷேக்ஸ்பியர், மில்டன், ஒர்ட்ஸ்வொர்த் முதலிய கவிஞர்களுக்கு நிரந்தரமான ஞாபகச்சின்னம் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அவர்கள் பிறந்த இடங்களையும், உபயோகித்த பொருள்களையும் பொன்னே போல் போற்றி வருகிறார்கள். நம்மவர்கள் அந் நற் பழக்கத்தைப் பின்பற்றி ஒழுகுகிறார்களா? என்றால் பெரு பாலும் இல்லை யென்றே சொல்ல வேண்டி யிருக்கிறது.

தமிழ் மொழிக்கே, இலக்கியத்துக்கே கதியெனச் சொல்லத் தக்க கம்பர், திருவள்ளுவர், இளங்கோ அடிகள் முதலிய மகா கவிகளை குறித்து நம்மக்கள் பெரும்பாலாருக்கு ஒன்றுமே தெரியாது. மேற் குறித்த கவிஞர்கள் பிற நாட்டுக் கவிஞர்களுக்கு எந்த வகையிலேனும் பிற்பட்டவர்களா? "பூர்வீகக் கிரேக்கருக்கு ஹோமர் எப்படியோ, ரோமருக்கு

வர்ஜில் எப்படியோ, இத்தாலியருக்கு டாண்டி எப்படியோ, ஆங்கிலேயருக்கு ஷேக்ஸ்பியரும் மில்டனும் எப்படியோ, வட மொழிக்கு வால்மீகி எப்படியோ, அப்படியே தமிழருக்கும் கம்பர் பெருமை கொடுக்கிறார்" என அறிஞரொருவர் கூறி யிருக்கிறபடி, நம் கவிகள் மற்றெக் கவிகளுக்கும் கவிதைப் பண்பில் குறைந்தவர்க ளல்லர். இன்னுங் கேட்டால் ஒரு விதத்தில் மேம் பட்டவர்களென்றே கூறவேண்டும்.

"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல், வள்ளுவர்போல், இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை," என்று நமது வரகவி பாரதியார் பாடி யிருப்பதொன்றே நாம் கூறுவதற்கு போதிய சான்றாகும். பாரதியார் இதை உயர்வு நவிற்சியாகக் கூறவில்லை; உண்மையாகவே கூறி யிருக்கிறார். ரெவரண்டு பெஸ்கி, ஜி. யு. போப் முதலிய மேனாட்டு அறிஞர் களும் ஒப்புக்கொண்ட தாகும். அப்படி, நமக்கு மங்காத பெருவாழ்வும், கடல் கடந்த நாடெல்லாம் பாராட்டத்தக்க பெருமையும் அளித்து உலகிலேயே பிற நாடுக ளிடையே தமிழ்நாட்டைத் தலைநிமிர்ந்து நிற்கச் செய்த கம்பர் போன்ற மகாகவிகளை எவ்விதம் போற்ற வேண்டும் என்பதை நாம் சொல்லவும் வேண்டுமோ !

முன்னைவிட, இப்போது தமிழ் நாட்டின் பல பாகங்களி லும் திருவள்ளுவர், கம்பர் முதலிய கவிஞர் திருநாள்களை நம் மவர்கள் விழாவாகக் கொண்டாடித்தான் வருகிறார்கள். இவ் வாண்டும் கம்பர் திருநாள் சென்னைமாநகர் உட்பட தமிழ் நாட்டின் பல விடங்களிலும் கொண்டாடப் பட்டுத்தான் வரு கிறது. ஆனால், இதுமட்டும் அமையாது. "புகழ் கம்பன் பிறந்த தமிழ்நாடு" என்றும், "வள்ளுவன் தன்னை உலகி னுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ் நாடு" என்றும் வார்த்தை யளவில் புகழ்பாடி விடுவதால் மட்டும், அவர்களைப் போற்றி விட்டதாகாது. மேனாட்டார், ஷேக் ஸ்பியர், மில்டன் முதலிய கவிகளுக்குக் கௌரவமளித்து வரு வதுபோல், கம்பர் முதலிய மகா கவிகளுக்கு நிரந்தரமான ஞாபகச் சின்னம் ஏற்படுத்த வேண்டும். ஒன்பதாம் நூற் றாண்டில் கவியரசர் கம்பர் பிறந்த சோழநாட்டைச் சேர்ந்த தஞ்சை பாபவிநாசம் பக்கலிலுள்ள திருவழுந்தூர் என்ற ஊரை, தமிழ் மக்களெல்லாம் சந்ததி சந்ததியாகச் சென்று கண்டு வணங்கும் புனித க்ஷேத்திரமாக்க வேண்டும். 'கம்பன் மேட்'டை உலகிலுள்ளா ரெல்லாம் வந்து காணும் கண்காட் சிக் குரிய இடமாகச் செய்ய வேண்டும், கம்பன் போன்ற கவி ஞர்களைப் போற்றாதிருக்கும் வரை தமிழ் மக்களுக்கு உயர் வில்லை; விமோசனமில்லை.

# அமரகவி கம்பன் (பி. சி. தம்பி.)



வேலையென ஆழ்ந்துபொருள் வளனுங் காட்டும்
விளங்குபெரு விண்ணகமாய் விரிந்தும் தோன்றும்
கோலமிகு புவியன்னக் கவினுங் காட்டும்
கற்பனையென் மலைநிமிர்ந்து ககனம் முட்டும்
ஓலமிடும் மாநதியின் ஒழுக்கங் காட்டும்
ஓங்கார மாருதத்தின் உணர்ச்சி வீசும்
காலையிளம் பருதியெனக் கலையைக் காட்டும்
கலைஉலகம் **கம்பனவன் கவிதை** யாகும். (1)

மந்தரமென் மாமலையை மத்தாய்க் கொண்டு
மறிகடலைக் கடைய மாணமுதம் தோன்றி
அந்தமிலா வாழ்வதனை அமரர் எய்தி
அழிவில்லா இன்பமதை அடைந்தா ரென்ன
எந்தைமுனி **வான்மீகி** எழுதி வைத்த
இராமகதைக் கடலினின் றெழுந்து வந்து
செந்தமிழர் இன்பமதில் தோய்ந்து வாழச்
செய்தமது கம்பனவன் கவிதை யாகும். (2)

ஒப்பரிய வான்மீகி உலகில் தந்த
ஓங்குபுகழ் இராமகதை உயர்ந்த நூலாம்
முப்பழத்தைப் பிழிந்துஅதன் மதுவைத் தேக்கி
முழங்குதமிழ் என்றநறும் மதுவில் பெய்து
செப்பரிய தமிழர்தம் சிறந்த வாழ்வும்
செம்மைமிகு ஒழுக்கமெனும் பாகுஞ் சேர்த்து
எப்பொழுதும் திகட்டாது இனிக்கும் எங்கள்
இன்னமுதாம் கம்பனது கவிதை தானும். (3)

வீங்குமிள வேனிலிலே விண்மதியம் தோன்ற
வீழருவி பலபாயும் வியன்சோலை யதனில்
தேங்கமழும் மாமலரைத் தேனீக்கள் சூழ்ந்து
தேமதுர இசைபாட தென்றல் விளையாட
பூங்கமழும் கூந்தலவர் பவளஇதழ் திறந்தே
பண்ணிறைந்த வீணையொலி பரப்பி இசைபாட
ஆங்குறைவார்க் கின்பமதை அளிப்பதினும் மேலாய்
அளிக்குமெங்கள் கம்பனவன் கவிதை தானும். (4)

பெய்யும்மழை முகிலாமோ? பேசற் கொண்ணு
பேரமுதப் பிழம்பாமோ? பூங்குயிலாள் சீதை
செய்யாநறுஞ் சொல்லாமோ? தீந்தமிழர் முன்னம்
செய்ததவப் பயனோமோ? தமிழாம் தெய்வத்
தையலவள் முடியாமோ? தேவர் நாட்டில்
துலங்குசெழுந் தருவாமோ? சிறந்தமணி யாமோ?
அய்யோ! யாம் என்னென்றே அறைவோம் எங்கள்
அமரகவி கம்பனவன் கவிதை தன்னை. (5)

# சித்த வைத்தியத்தின் சிறப்பு

(கி. மகாலிங்கம்)



எல்லா வளங்களிலும் சிறந்து விளங்கிய நமது நாடு இன்று எல்லாராலும் "வறுமை நாடு" என்று சொல்லப் படுகிறது. ஆனால், இந்தப் பெயர் வெள்ளைக்காரன் வந்த பிறகுதான் வந்தது என்பதை நினைக்கும்போது எனக்கு, எவ்வளவோ சந்தோஷமா யிருக்கிறது. இருந்தாலும், இவ்வளவு காலமாக நமது நாடு அடிமைப் பட்டு இருந்தும் கலைகளில் மாத்திரம் வறுமை என்பது ஏற்படவில்லை என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.

"வெள்ளைக்காரன் இந்த நாட்டை விட்டுப் போய் விட்டால், இந்திய மக்கள் காலமெல்லாம் சண்டை போட்டுச் செத்துப் போவார்கள் என்பது நிச்சயம்" என்று சில அரசியல் பிரஹஸ்பதிகள் அபிப்பிராயப் படுகிறார்கள். அப்படிப்பட்டவர்கள் ஆங்கிலேயர் நமது நாட்டை விட்டுப் போய்விட்டால், அத்துடன் நமது மருத்துவக் கலையும் மாண்டுவிடும் என்று சொன்னால் நான் அதைப்பற்றி ஆச்சர்யப் படமாட்டேன்.

இன்று உலகில் பரவியுள்ள எல்லாவிதமான கலைக்கும் எப்படி நமது நாடு பிறப்பிடமா யிருக்கிறதோ, அதே போல, வைத்தியக் கலைக்கும் நமது நாடுதான் பிறப்பிடம். அது தோன்றிய இந்திய நாட்டிலேயே 'இந்திய மருத்துவத்தை'ப் பற்றிப் பேசுவது, தமிழ்நாட்டிலே தமிழ்ப் பாட்டுத்தான் பாட வேண்டும் என்று சண்டை போடுவது போல இருக்கிறது.

தர்மாமீட்டரும், ஸ்டதஸ்கோப்பும் வராத நாளிலேயே, நமது நாட்டு மருத்துவப் பெரியார்கள் நாடி பார்ப்பதன் மூலமாக, நாலாவித நோய்களையும் அறிந்து கொள்ளக் கூடிய நிலைமையி லிருந்தார்கள். இன்று மேற்படி துணைக்கருவிகளைக் கொண்டு கண்டு பிடிக்க முடியாத நோய்களைக் கூட அன்று அவர்கள் கைநாடி பார்ப்பதன் மூலம் கண்டு பிடித்து வந்தார்கள் என்றால் அதைக் கண்டு யாரும் ஆச்சர்யப் படாமலிருக்க முடியாது.

வைத்திய முறைகளிலேயே முதன் முதலாகத் தோன்றியது சித்த வைத்திய முறையே யாகும். இதை யாரும் மறுக்க முடியாது.

இது முறையே பரமசிவன், பார்வதி, கணபதி, கந்தன் முதலியவர்கள் நந்தியம் பெருமான், அகத்தியர் முதலான சிவகணங்களுக்குச் சொன்னதாக பழைய வரலாறுகள் சொல்லுகின்றன. அதை நமது தமிழ்க்குருவாகிய அகத்தியர் தமது பன்னிரண்டு சீடர்களுக்கும், திருமூலர் முதலான பதினெட்டு சித்தர்களுக்கும்

உபதேசித்தார். அவர்கள் அந்த மருத்துவங்களைப் பற்றி எழுதி வைத்த நூல்கள் கணக்கில் அடங்கா. கால பேதத்தால் அவை கள் அழிந்து போயின. அன்றியும், நமது பழைய அரசர்கள் தன்னுடைய அமைச்சர் கூட்டங்களிலேயே வைத்தியர்களையும் வைத்து ஆதரித்து வைத்தியத்தை வளர்த்து வந்தனர்.

நமது நாட்டில் துலுக்கர்கள் படையெடுத்த போது கொள்ளை யடித்துப் போன எவ்வளவோ செல்வங்களில் மருத்துவச் செல் வமும் ஒன்று. நமது சித்த வைத்திய நூல்களை எடுத்துக் கொண்டு போய், துளுவம், உருது, அரபி முதலிய பாஷைகளில் மொழி பெயர்த்து அதையே யூனானி முறையென்று இன்றுவரை கையாண்டு வருகிறார்கள். இது ஒரு புறமிருக்க, வடமொழியில் கைதேர்ந்த பல மேதாவிகள் நமது சித்த வைத்திய நூல்களை வடமொழியில் மொழி பெயர்த்து, வடமொழியில் இருந்துதான் வைத்தியமே வந்ததாகக் கூறி, அதையே ஆயுர்வேத முறைக ளாகக் கையாண்டு வருகிறார்கள். இப்படி சித்த நூல்கள் மூலத்தி லிருந்து பிற பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டு அவர்களால் மூல நூல்கள் அழிக்கப்பட்டது போக எஞ்சிய நூல்கள் வேற்றர சர்களுக்குப் பயந்து கொண்டு பூமியில் புதைக்கப்பட்டு அழிந்து போயின. இன்னும் சில சித்த நூல்கள் அதன் பெருமை தெரி யாமல் ஆற்றிலே விடப்பட்டும் அழிந்து போயிருக்கிறது.

இப்படி பல வகையில் அழிந்ததும் அழிக்கப் பட்டதும் போக, மிகவும் சிதைவான சில பாக்களினால் சில சித்த வைத்திய நூல் கள் தலை காட்டி யிருக்கின்றன.

பரம்பரையாக்ச் சிலர் தங்களிடமுள்ள வடமொழி, தமிழ் மருத்துவ நூல்களைப் பொக்கிஷம் போல் காப்பாற்றி, தானும் அனுபவியாமல், பிறரையும் அனுபவிக்க விடாமல் செய்து வரு கிறார்கள். அவர்கள் தான் அப்படி யென்றால் படித்து, உலகம் தெரிந்த ஒரு சிலர் தமக்குத் தெரிந்த சில விஷயங்களை பிறருக் குச் சொல்லவோ, 'மருத்துவப் பொழில்' போன்ற மருத்துவப் பத்திரிகைகளுக்கு எழுதவோ முன்வர மாட்டேன் என்கிறார்கள். கேவலம் பணத்தின் மேல் ஆசை கொண்டு நமது உயர்ந்த மருத் துவக் கலை இப்பொழுது சில படித்த, விஷயம் தெரிந்த அறிவாளி களாலேயே அழிக்கப்படுவதை நினைக்கும்போது வருத்தப்படா மல் இருக்க முடியவில்லை.

அந்த நாளில் நம் மூதாதையர் நோய்களுக்குத் தகுந்த வைத் தியங்களை கண்டு பிடிப்பதிலேயே வாழ்நாளைக் கழித்து வந்தார் கள். ஆனால், இன்று மேனாட்டு முறைப்படி வைத்தியம் படித்த சில மேதாவிகள் புதுப்புது விதமான வியாதியைக் கண்டு பிடிப் பதில் தங்களுடைய வாழ்நாளைக் கழித்து வருகிறார்கள். இதைப் பற்றி அவர்கள் மேல் குற்றங் கூற நான் தயாராயில்லை. வெள் ளைக்காரர்கள் தாங்கள் தயார் செய்யும் மருந்தை விற்பனை செய்

யும் ஏஜண்டுகளாகத் தானே இவர்களை நியமித்திருக்கிறார்கள். அவர்களும் புதுப்புது விதமான மருந்துகளைக் கண்டு பிடித்துக் கொண்டே யிருப்பார்கள். இவர்களும் அதற்குச் செலவுக்கு வேண்டிய வகையில் புதுப்புது விதமான வியாதிகளைக் கண்டு பிடித்துக் கொண்டே யிருப்பார்கள்.

எனக்குத் தெரிந்த வரையில் இந்திய மருத்துவத்தை விட மேனாட்டார் பிரமாதமாக மருந்து வகைகளைச் செய்து விட்டதாகச் சொல்ல மாட்டேன். வேண்டுமானால் இந்திய மருத்துவ முறைப் படி நாம் சொல்லும் வியாதிகளின் பெயர்களை புதிதாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள் என்று சொல்லலாம்.

மருந்து எல்லாம் ஒன்று தான். அதைக் கையாளும் முறை தான் வேறு. நமது முன்னோர்கள் கையாண்ட முறைப்படி இவர் களும் கையாண்டிருந்தால் அவர்களுடைய வைத்தியத்தில் நம் நாட்டு மக்களுக்கு மோகம் உண்டாகி யிருக்காது. அந்த வைத் தியமும் இவ்வளவு பிரசித்தி அடைந்திருக்காது.

ஆனால், "எங்களுடைய வைத்தியம் உங்களுடைய இந்திய நாட்டிலிருந்துதான் இரவல் வாங்கியது" என்று ஒப்புக்கொள்ளக் கூடியவர்களும் மேனாட்டில் இருக்கிறார்கள். அவர்களுடைய புண் ணியத்தினால் தான் இந்த இந்திய வைத்தியக் கல்லூரியாவது இருக்க முடிகிறது. அதைப் பொறுத்த வரையில் நாம் எல்லாரும் சந்தோஷப்பட வேண்டியது தான்.

அது எப்படியோ போகட்டும். நம் ஒவ்வொருவருடைய முக் கிய கடமை என்னவென்றால், நம் நாட்டுக்கே சிறப்பாக உரிய சித்த வைத்திய முறைகளை மறைந்து போகாமல் பாது காக்க வேண்டும் என்பதுதான். இதை உங்களுக்கு நினைவூட்டுவதே எனது இக் கட்டுரையின் நோக்கமாகும்.

[குறிப்பு.—இது சமீபத்தில் டாக்டர் திருமூர்த்தி தலைமையில் நடை பெற்ற இந்திய வைத்தியக் கலாசாலைக் கூட்டமொன்றில் பேசியதன் சுருக்கமாகும்.]

# உடைந்த உள்ளம்

("சித்திரலேகன்")



"அப்பொழுது மழை 'சட். சட்' என்று பெய்து கொண்டிருந்தது. தட், தட் என்ற இடியின் முழக்கம் வானத்தைப் பிளந்து கொண்டிருந்தது. வாடைக்காற்று 'சில்' என்று ஓலமிட்டு வீசியது.

நான் ஜன்னல் கம்பிக் கிராதிகளைப் பிடித்துக்கொண்டு வெளியே பார்த்துக் கொண்டிருந்தேன். 'சுரீர், சுரீர்' என்று சுழன்று வீசும் வாடைக்காற்று ஒருவித நடுக்கத்தைக் கொடுத்தது. பேய்க்காற்றால், மரங்கள் தட், தட் என்று ஒடிந்து விழும் சப்தம்........

வெளியில் வீசும் பேய்க்காற்றை விட், என் உள்ளத்தில் கொடிய புயல் சுழன்று வீசிக் கொண்டிருந்தது. என் உள்ளம் எங்கெங்கோ தாவித் திரிந்து கொண்டிருந்தது.

"...படுக்கவில்லையா!........."......என் அன்பு கனிந்த ராஜியின் இன்பப் பெருக்குடன் கூடிய வார்த்தையது. அவள் என் பக்கம் வந்து நின்றாள்...என்னை அன்புடன் அணைத்தவாறே!...

நான் அவளையே பார்த்தேன்...அள்ளி விழுங்கி விடுவது போல. அவளிட மிருந்த ஒரு நீண்ட பெருமூச்சு..."என்னைக் கல்யாணம் பண்ணியதிலிருந்து ஏன் ஒரு மாதிரியா யிருக்கிறீர்கள்... ஏன்! நான் அழகா யில்லையா!..." அவளது உள்ளப் பொருமலிலிருந்த எழுந்த வார்த்தைகள் அவை.

"ராஜி!...உன் அழகைப் பருக இந்த என் இரண்டு கண்களும் போதாவே..." என்று அவளை மார்புடன் அணைத்தேன். ஆனால்...மறுகணம் என் மனம் 'திக்' என்றது! ஏன்!...அவளிடமும் இதுமாதிரிதான் நான் ஒரு சமயம் சொன்னேன். அப்பொழுது அவள் என் அன்புப் பிணைப்பில் கட்டுண்டு காதல் பெருக்கில் திணறினாள்...என் இதயம் அப்பொழுது இன்பப் பெருக்கில் சிலிர்த்தது.

ஆனாலும்,—'ராஜி! நீ மாத்திரம் அவளா யிருந்தால் என் அமுதக்கடலில் மூழ்கிக் கிடப்பாய்' என்று என் உள்ளக் கிணற்றில் எங்கோ ஒரு குமிழி எழுந்தது.——

அப்பொழுது வாசலில் ஒரு வண்டி நின்ற சப்தம் கேட்டது. மறுநிமிடம் 'தட, தட்' என்று கதவை இடிக்கும் சப்தம்——

நான் கதவைத் திறந்தேன். ராஜி என் பின்னால் நின்று கொண்டிருந்தாள்.

'டாக்டர்! ஸார்!——என் 'வொய்ப்' (wife)க்கு மிகவும் டேன் ஜர்—ஸார்—சீக்கிரம் புறப்படணும்' என்று பட் பட்டத்தவாறு ஒரு கிழவர்—சுமார் 50 வயதிருக்கும் உள்ளே நுழைந்தார்.

நான் ராஜியைத் திரும்பிப் பார்த்தேன். அவள் முகத்தில் ஏக்கத்தின் சாயை படர்ந்தது.

"ராஜி! போய்விட்டு ஜல்தியாய் வந்துடறேன்"—என்று அவ ளைத் தேற்றிவிட்டு, கிழவருடன் சென்றேன். அப்பொழுது, ஏக் கம் ததும்பிய அவளது பெருமூச்சை நான் அறியாமலில்லை.

* * * *

கிழவரும் நானும், அவரது வீட்டை யடைந்தோம். அவர் மனைவி படுத்திருந்த அறைக்குள் நுழைந்தேன். அந்தக் கிழவ ரது மனைவி, ஒரு கட்டிலில் படுத்திருந்தாள். பக்கத்தில் ஒரு வேலைக்காரி விசிறிக் கொண்டிருக்தாள்.

நான் அவரது மனைவியின் கைபிடித்து நாடி பார்த்தேன். பட, பட என்று இதயம் வெடித்து விடுவதுபோல் துடித்துக் கொண்டிருந்தது.

நான் தர்மாமீட்டரை யெடுத்து, கிழவரை, அவர் மனைவி வாயில் வைக்கும்படி கொடுத்தேன். அப்பொழுதுதான்—நான்—அவரது மனைவியின் முகத்தைப் பார்க்க நேர்ந்தது. உலகமே அதிர்ந்தாலும், எனக்கு அவ்வளவு அதிர்ச்சி ஏற்பட்டிருக்காது—அப்பொழுது—அந்த முகத்தைக் கண்டதும், உச்சி முதல் உள் ளங்கால் வரை ஒரே அதிர்ச்சி யடைந்தது—'கமலி' 'கமலி' என்று என் இதயக்கடலில் குமிழி, குமிழியாய் எழுந்தது.

நான் தர்மாமீட்டரை கிழவரிட மிருந்து வாங்கினேன். அப் பொழுது என் கை பட, பட என நடுங்கியது.

உஷ்ணம் 104 டிகிரி இருந்தது.

"அபாயம் ஒன்றுமில்லை! சிறிது ஜாக்ரதையாக யிருக்கணும்" என்று கிழவரைத் தேற்றிவிட்டு, நான் வீட்டிற்குத் திரும்பினேன் பைத்தியங் கொண்டவன்போல்.

* * * *

கட்டிலின் மீது விரித்திருந்த மெத்தையில் 'தொப்' என்று உட்கார்ந்தேன் மனமுடைந்தவன்போல். ராஜி என் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள்.

"ராஜி! நீ படுத்துக் கொள்ளவில்லையா—?" என்று கேட் டேன். என் வருகைக்காக, கண் கொட்டாது காத்துக்கொண் டிருந்த அவளுக்கு எப்படி யிருக்கும்? நீண்ட பெருமூச்சு விட்டு என்னை உராய்ந்தவாறு இருந்தவள் மனம் வெதும்பி நகர்ந்தாள்—என் மனம் எப்படி யிருக்கும்?——"ராஜி!——" என்று எழுந்து

அவளை என் மார்புடன் இறுக அணைத்தேன். அப்பொழுது ராஜி விசித்து விசித்து அழுதாள்—அவளை அப்படியே தூக்கி, என் மடியில் படுக்க வைத்துக்கொண்டேன்.—ஆனால் என் உணர்ச்சி என்னிடமில்லை. என் உள்ளம் ஐந்து வருடங்களுக்கு முன்பு நடந்த சம்பவங்களைத் தாவிப்பிடித்தது.—என் மனத்திரையில்—கடந்த நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றாய் பளீர் பளீர் எனத் தோன்றியது——.

"கமலா!——ஆம்; அப்பொழுது அவள் என் கமலா!——எனது சொந்தக் கமலா;——எவ்வளவு ஆசை என் சொந்தக் கமலா என்று சொல்லுவதற்கு! கமலா, கமலா என்று என் ஜீவ நாடியாயிருந்தாள் அவள்.

என் தந்தை மதுரையில் வக்கீலாயிருந்தபொழுது தான் எல்லாச் சம்பவமும் நடந்தது. எங்கள் வீட்டிற்குக் குடி வந்தார்கள் கமலாவின் தாயும் தகப்பனும். கமலாவின் தந்தை 'ஹெட் அக்கவுண்டெண்டு' வேலை. 100 ரூபாய் சம்பளம். இரு குடும்பங்களும் வெகுநாள் பழகியவர்கள்போல் அன்னியோன்யமாய் விட்டது. என் அம்மாவிற்கு கமலா என்றால் பிராணன். கமலா—பார்ப்பதற்கு மூக்கும் விழியுமாக நன்றாயிருப்பாள்—மாமி! மாமி என்று கமலா என் அம்மாவையே சுற்றிக் கொண்டிருப்பாள். அப்பொழுது கமலாவிற்கு பத்துப் பனிரெண்டு வயதிருக்கும். வாலிபக் களை ததும்ப ஆரம்பிக்கும் பருவம். நான் 'இண்டரில்' வாசித்துக் கொண்டிருந்தேன். 'அத்தான்! அத்தான்' என்று கூறி உயிரை விடுவாள்.

காலேஜிலிருந்து வீடு வரும்பொழுதே கமலாவை நினைத்து கொண்டு தான் வருவேன்.

'கமலி!' (அதுதான் அவளுக்கு வைத்த எனது செல்லப் பெயர்.) கமலி என்று அன்பு குழைய கூப்பிடுவதில் அளவு கடந்த ஆசை எனக்கு.

நான் என் அறையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருப்பேன். அப்பொழுது கமலி—என் பின்னால் வந்து நின்று கொண்டு குறும்பாய்க் கனைப்பாள். நான் அப்பொழுது தான் கவனிக்காததுபோல் ஊன்றிப் படிப்பேன்.

"துரைவாளுக்கு படிப்பு மும்மரம் போலும்!" என்று கேலி பண்ணுவாள்.

"இல்லாட்டி துரைசானியை பாத்திண்டிருந்தாப் போதுமா!——"

அவளுக்கு 'பொய்யாக'க் கோபம் வந்துவிடும். நான் நிஜமாகவே அவளைத் தேற்ற ஆரம்பித்து விடுவேன். ரோஜா இதழ் போன்ற கன்னங்களில் என் வாய் இதழ்கள் படியும்——. அது

தான் அவளுக்குத் தேறுதல்——அதை நினைத்தால் தானே என் அறைக்கு வருவாள்.

என்னமோ! கமலா பேரில் அளவு கடந்த ஆசை யேற்பட்டு விட்டது எனக்கு. அம்மா—கமலியைத் தவிர வேறு எந்தப் பெண்ணைப் பற்றியும் கண்டிப்பாய் பேசக்கூடாது என்பது என் உத்திரவு.

பாழுங் கடவுளுக்குத்தான் பொறுக்காதே! எந்த 'இழவு' காரியத்திலும். இண்டரில் பாஸானதும், எனது அப்பா—டாக்டர் பரீக்ஷைக்கு படிக்க வேண்டுமென்று ஒற்றைக்காலால் நின்றார். கமலியைப் பிரிய வேண்டுமே என்று என் மனம் துடித்தது. பாழும் பரீக்ஷையில் 'டோக்கர்' அடித்திருக்க லாகாதா!—என்று என் உள்ளூர எண்ணம். சென்னைக்கு டாக்டர் பரீக்ஷை படிக்க போகிறேன் என்று தெரிந்த முதற்கொண்டு கமலாவின் வதனம் வாட ஆரம்பித்து விட்டது. அவள் முகத்தின் இன்பக்களை மறைந்து விட்டது.

நான் சென்னைக்கு புறப்படவேண்டிய தினம். என் அறையில் கிறுக்குப் பிடித்தவன்போல் இங்கு மங்கும் உலாவிக் கொண்டிருந்தேன்.

கதவு மெதுவாய் நகர்ந்தது;——திரும்பிப் பார்த்தேன். கமலி—நின்று கொண்டிருந்தாள். ஒரு நிமிடம் மௌனம்——.

"கமலி—" என்று என் உள்ளம் கொதிக்கக் கத்தினேன்.

"அத்தான்——" என்று ஓடிவந்து——என் இன்ப அணைப்பில் புதைந்து கொண்டாள்.

"மறந்துவிட மாட்டீர்களே!——" என்று மூச்சுத் திணறிய வண்ணம் கேட்டாள்.

"உயிர் போனாலும்——கமலி"——அதற்குமேல் பேச முடியவில்லை. அப்பொழுது ஒரு பல்லி உயர இருந்து கீழே வீழ்ந்து துடித்தது——.

அதுதான் கடைசியாக நான் கமலியைப் பார்த்தது. முதல் வருஷம் 'கோர்ஸ்'முடிந்து வீட்டிற்கு வந்த பொழுதுதான் எல்லாம் எனக்குத் தெரியவந்தது. கமலியின் தகப்பனார்......அவளை ஒரு கிழவருக்குக் கல்யாணம் பண்ணிவிட்டார்......ஏன்!...என் ஜாதகம் பொருந்தவில்லையாம். ...மேலும்...அவர்கள் ஒரு பிரிவு! நாங்கள் ஒரு பிரிவு! பாழும்...ஒரே ஜாதியில் ஆயிரத்தெட்டு பிரிவு இருந்து தொலையுதே!... கமலியின் தகப்பன்...ஆஷாடபூதி யாச்சே!......ஒரு பச்சிளங்கிளியை!...

அப்பொழுதே என் உள்ளம் உடைந்து விட்டது. அன்புப் பெருக்குடைய என் தாய் கட்டாயத்தால் ராஜியைக் கல்யாணம்

பண்ணும்படி நேர்ந்தது. அவள் என்னைப்பெற்ற கட்னுக்காகவா வது அவளைத் திருப்தி படுத்த வேண்டாமா!...

காலதேவன் இரதத்தை வேகமாய்ச் செலுத்தினன். வருடங்கள் ஐந்து, ஆருக உருண்டன. டாக்டர் பரீக்ஷையும் பாஸ் பண்ணி மாய்வரத்திற்கு வந்து சேர்ந்தேன். இங்கு என் இருதய தெய்வம் கமலியை பார்க்கும்படி...பாக்கியம்...கிட்டியது...... "என் மனத்திரையில் ஒரே இருளான்து ஓடியது. என் கற்பனையும் சிதைந்தது.—

நான் உணர்வு பெற்று......ராஜியை பார்த்தேன். என் மடியில் தலை வைத்துப் படுத்திருந்த அவள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

"அடி! பேதை!..." என்று குனிந்து...செவ்விய அவள் உதடுகளில் முத்தமிட்டேன்.

2

மறு நாள் நான் கிழவர் வீட்டிற்குச் சென்றேன். இப்பொழுது எனக்கு அதிக அக்கரையல்லவா, கிழவரை விட. காய்ச்சல் வர வர அதிகமாகிக் கொண்டு வந்தது. என் நெஞ்சம் பட பட என அடித்தது.

அவள் இன்னும் கவனிக்கவில்லை.... அந்த மட்டில் என் மனதிற்கு ஒரு ஆறுதல். என்னைப் பார்த்ததும் ஏதாவது அதிர்ச்சியாய் விடுமோ...என்ற பயம்.

பாவம்! மனசு உடைந்து விட்டது...சிறு பிள்ளை போல் அழுது விடுவார் போல இருந்தது. "அவரைத் தேற்றி விட்டு அன்று திரும்பினேன். பழிகாரக் கடவுளே!...என் கமலியைப் பிழைக்கும்படி செய்து விடு...உனக்குக் கோடிப் புண்ணியம்..." என்ற ஸ்மரணை தான் அன்று இரவு முழுவதும்.

3

அன்று சாயங்காலம் 6-மணியிருக்கும். முணு, முணுவென்று தூற்றல் தூறிக் கொண்டிருந்தது. கிழவர் பட, பட என்று என் வீட்டிற்கு ஓடி வந்தார். "ஸார்!......கண்டபடி பிதற்றுகிருள்... ரொம்ப டேன்ஜர்" என்று அழாக் குறையாய்ச் சொன்னர்.

என் உடல் ஒவ்வொரு நரம்பும் துடியாய் துடித்தது. நான் கிழவருடன் மனம் பதை பதைக்கச் சென்றேன்.

* * *

அறையில், குத்துவிளக்கு 'மினுக் மினுக்' என்று சுடர் விட்டுக் கொண்டிருந்தது. விசிறிக் கொண்டிருந்த வேலைக்காரி

வெளியே சென்றாள். நான் என் ஆசைக் கமலியின் கை பிடித்து நாடி பார்த்தேன். அப்பொழுது என் கை பட பட என நடுங்கியது.

அவள் 'தண்ணீர்' என்று கிழவரிடம் கை சாடை காட்டினாள். நான் சோடா கொடுத்தால் நலம் என்றேன்.

கிழவர் பதை பதைக்க வெளியே சென்றார் சோடா வாங்கு வதற்கு.

அப்பொழுது————.

"கமலி !————" என்று என் உள்ளம் வெதும்ப அழைத் தேன். அவள் என்னைப் பார்த்தாள். அவள் கண்கள் அகல விரிந்தன. அவள் முகத்தில் இன்பப் புன் முறுவல் ஊடுருவியது.

"ஆ !——நீங்களா !——" என்று என் கைகளைப் பிடித்தாள். மறு கணம் என் கைகளைத் தள்ளினாள். "ஆசைக் கைகளைப் பிடிக்க எனக்கு என்ன உரிமை————". அவள் முகம் ஏக்கத்தால் பொலிவு அற்றிருந்தது.

என் நெஞ்சம் வெடித்து விடுவது போல் துடித்தது————.

"என்னை மறந்து விட்டீர்கள !——" என்று கத்தினாள்.

பேய்க் காற்று குப் என்று நுழைந்து குத்து விளக்கை அணைத்தது.

"கமலா !——கமலா" என்று அலறி அடித்து சோடா வாங்கி வந்த கிழவர்——அவள் மேல் புரண்டு அழுதார்——.

————என் கமலி உயிர்——போய் விட்டது——அவள் முகத்தில் சாந்தி——அவள் வாழ்க்கையின்——ஏக்கம்——ஏமாற் றம்————அவளது பெண் ஜன்மம்——பாழ் ஜென்மம்——.

அன்று முதற் கொண்டு என் உள்ளம் உடைந்துவிட்டது ——இந்த மாய வாழ்க்கையில் நான் சாரமற்ற நடைப்பிணம்—— என் கமலியே பிரிந்து விட்டாள்——வாழ்க்கை எனக்கு எதற்கு! ——ஆனால், ராஜி——அவளை எப்படிப் புறக்கணிப்பது——? அவ்விதம் செய்தால்——இரு பெண்களின் வாழ்வைக் குலைத்த பாவி நான்! —பாழுங் கடவுள் மானிடனை பம்பரம் போல் சுழற்று கிறான்————அவன் திருவிளையாடலா இது !——.

# விஞ்ஞானப் புனல்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)



(சென்ற இதழ் தொடர்ச்சி)

தொழிற்கலைகள் சிறப்புற்றதால், எல்லாத் தொழில்களும் எல்லாவிடங்களிலும் செய்யப்படும் வழக்கம் நின்றுவிடுகின்றது. ஒவ்வொரு தொழிலைச் செய்யும் வினைஞரும் கலைஞரும் தத்தமக்கான இடங்களில் கூடி வேலை செய்யும் வழக்கம் ஏற்படுகின்றது. ஒவ்வொரு தொழிற்கலையும் அதற்கானதோரிடத்தில் ஆற்றப்பட்டு வருகின்றது. அவ்வாறு எழுந்த இடங்களில், அவ்வத் தொழில்களின் பாற்பட்ட வினைக்கலைஞரும், தொழுவரும் ஒன்று கூடுகின்றனர்; அவ்வத் தொழின்பாற்பட்ட தொழிற்சாதனங்களும், செயற்கருவிகளும், வைக்கப்படுகின்றன. இவ்வாறு, தொழுவர் பலர் அடர்ந்துள்ள இடங்கள் சில சிறப்புறுகின்றன. அவ்விடங்களில் பெருவாரியாய்க் குவிந்து கிடக்கும் விளைவுப் பொருள்களை நோக்குங்கால், சிறப்பியல் கலைப்பயிற்சித் தொழின்முறை பயக்கும் சிறந்த விளைவுகளை விட மேன்மையான வற்றை வேறு வகையான தொழின் முறைகளைக் கையாள்வதால் தோற்றுவிக்க முடியாது என்ற முடிவைப் பெறுதல் திண்ணம். மற்ற வகைகளினதை விட சிறப்பியல் வகையான தொழில் முறையின் ஆற்றல் மாண்பானது எனக் காண்கிறோம்.

தற்காலத்து மக்கள், அங்குமிங்குமாய் அலைந்தபோது, தாம் திரிந்த வழிகளில், தரையில் கிடந்த கற்களைப் பொறுக்கியெடுத்து, அவற்றால் கருவிகள் செய்தனர். ஒரு சமுதாயத்திருந்த ஒவ்வொருவனும், தனக்குத் தேவையான கருவிகளைச் செய்வதில், சிறிது காலங் கழித்து வந்தான். ஆனால், கற்களைக் காய்ச்சி, செம்பையெடுக்கும் வகைகள் கண்டு பிடிக்கப்பட்டபின், சிறப்பான வினைஞர் சிலர் மட்டுமே, சமுதாய முழுமைக்கு வேண்டியதான பாரை, கோடரி, இன்னோரன்ன கருவிகளைச் செய்துதரலாயினர். அச்சமுதாயத்தினர், அக்கருவிகளின் தேவை யேற்பட்டபோது, அவை உருவாக்கப்படும் இடங்களுக்குச் சென்று, அங்கிருந்த சிறப்பியல் வினைஞரிட மிருந்து அவற்றை வாங்கினர். இவ்வகையான போக்குகள் பலவும், நீலநதி, யூப்ரடிஸ் நதி, சிந்து நதி என்ற பேராறுகளைச் சூழ்ந்து பரந்திருந்த பள்ளத்தாக்கு நாடுகளில், பல பாங்குகளைக் கொண்டிருந்த சிக்கலியலான சமூக அமைப்பு முறை ஏற்பட்டு வளர்வதற்கு, ஏதுவாயின. அச்சமூக வியல் ஆட்சி முறையில், அதிகாரம் நடுத்திரட்டிருக்கையியலாயிருந்தது (ஸென்ட்ரலைஸ்ட்). தமக்குத் தேவையான உணவுப் பொருள்களைப் பிறர் துணையால் பெற்ற, சிறப்பியலான வினைஞரும் கலைஞரும் ஆன பலர், சிற்சில இடங்களில், மக்கள்

செறிந்த சமுதாயங்களில் நெருங்கி வாழ்ந்து வந்த வகையில் சமூகம் ஏற்பட்டிருந்தது.

மேற்கூறிய வகையான சமூக அமைப்பு முறை, 'நகரவியலானது' (அர்பன்) எனப்படுகின்றது. பேராறுகளுக்குச் சுற்றிலுமிருந்த படுகை நாடுகளின் குன்றாத நீர்வள நிலவள மேன்மையே, நகரவியலான அமைப்புமுறை முதலிடுதற்கானதான மூலகாரணம். அம்முறை வளர்ச்சி யுற்றதற்குக் காரணம், சிறப்பியலான விளைவு முறைக்கு இன்றியமையாததான பண்டமாற்று வணிகத்திற்குப் பெரும் வசதி யளித்த போக்குவரத்துச் சாதனங்களாய், அப் பேராறுகள் அமைந்தன வென்பதே.

படுகை நாடுகளின் நிறைவண்ணமான பண்புகள், அவற்றின் நீர்வளமும் நிலவளமும். அப்பண்புகள் நிமித்தம், நாம் மேற்கூறியுள்ள வகைகளில் முன்னேற்றம் ஏற்பட்டது. அதன் பின், அந்நாடுகளின் குறைவண்ணமான வியல்கள் காணப்படலாயின. அக்குறையும், அதனை நிறையாக்கும் வகையான ஊக்கத்தை மூட்டும் வகையில், விளைவீந்தது எனலாம். அந்நாடுகளின் குறைவியல், அவற்றில் உலோக வியலான கற்களும், மரங்களடர்ந்த காடுகளும் இல்லாதிருந்ததே. உலோகக் கற்களையும், மரக்கட்டைகளையும் கொணர்தற்கென, படுகை நாட்டு மக்களில் சிலர், முன்பின்னறியாத தூர தேசங்கள் பலவற்றிற்குத் துணிவுடன் பிரயாணஞ் சென்றனர். இவ்வகையில், அவர்கள், பூகோளம், நிலநூல் (ஜியாலஜி), உயிர் நூல் (நேசுரல் ஸயன்ஸ்) இன்னோரன்னவற்றின் பாற்பட்ட அறிவைப் பெருக்கிக் கொண்டனர். பலவாறான புதுமைகளைக் கண்டனர். தூரமான நாடுகளில் கண்டு பிடிக்கப்பட்ட ஏராளமான தொழிற்படாத பொருள்களைத் தம் நாடு கொணர்ந்து சேமித்தனர். ஆங்கு, அவற்றைப் பட்டை யிட்டு தொழிற்படச் செய்து, பய்னுறு பண்டங்கள் பலவற்றை பெருவாரியாய் விளைவித்தனர். தொழிற்படாத பொருள்களை இறக்குமதி செய்யவும், தொழிற்பட்ட பண்டங்களை ஏற்றுமதி செய்யவும் ஆனதற்கான வகையில், போக்குவரத்து வழிகள் கண்டு பிடித்தல், கப்பல் கட்டும் கலை, நாவாய் செலுத்து கலை (நேவிகேஷன்) இன்னோரன்னவற்றின் பாற்பட்ட வினைச் செய்வகைகளில் தேர்ச்சியுற்றனர்.

நகரவியலான வாழ்க்கைமுறை மேலும் மேலும் சிறத்தலால், எழுந்ததே, நாகரிகம், நாகரிக வியலான ஆட்சி முறையின் அடிப்படையான கருத்து. சிறப்பியலை வழிபடும வகையானது. அவ்வகையான ஆட்சி முறையில், எல்லோர்க்கும் வேண்டியதான பொருள்களை, பலவகைகளான சிறப்புத் தொழில்களின் பாற்பட்ட கலைக்குழுக்கள், தத்தமக்கான பணிகளி லீடுபட்டு, விளைவிப்பார்கள்.

(தொடரும்)

# அந்த முத்தம்

(எம். முத்துகிருஷ்ணன்)



"முடியவே முடியாது. என்னை வைத்துப் போஷிக்க சக்தி உண்டோ? இல்லையோ? ஊர், ஜாதி இவற்றைப் பற்றியும் தெரியாது. விவரமே தெரியாத எவனோ ஒருவனை மணந்து கொள்வதற்கு நான் இசையவே மாட்டேன்"......

"லலிதா! உன் தாய் இறக்கும் பொழுது, ஒரே குழந்தையாகிய உன்னை என்னிடம் விட்டுச் சென்றார், உன் அப்பா. அப்போதே ஒரு உயிலையும் எழுதி, அதில் 'ஸ்ரீதரன்' என்பவனுக்கு உன்னை மணம் முடிக்க வேண்டுமென்று கோரியிருக்கிறார். இந்த உயிலின் விஷயம் எப்படியோ அவனுக்குத் தெரிந்து, நாளைய தினம் உன்னைக் காண வருவதாய் கடிதமனுப்பி யிருக்கிறான். இந்த உயில் விஷயத்தை உன்னிடம் இவ்வளவு காலம் நான் பிரஸ்தாபிக்காததற்கு நீ சிறுமியா யிருந்ததுதான் காரணம். நீங்களிருவரும் மணம் செய்து கொண்டால் தான் இந்தத் திரண்ட ஆஸ்தி முழுதும் உங்களைச் சாரும். என்னம்மா செய்வது? உயில்படி நீ அவனைத் தான் கலியாணம் செய்து கொள்ள வேண்டும்."

"பெரியம்மா......! முன் பின் அறியாத ஒரு அன்னியனின் பாதத்தில் என் வாழ்க்கையைச் சமர்ப்பிப்பதற்குப் பதில் நான் கன்னிகையாகவே இருந்து விடுகிறேன்......"

இதற்கு மேல் பெரியம்மாளிடம் பேசிக் கொண்டிருக்க லலிதாவிற்கு பிடிக்கவே இல்லை. சிறு வயது முதல் தன்னை வளர்த்து வந்த அந்த பெரியம்மா, இன்று அடிமைத் தளையில் பூட்டும் கூற்றுகக் காட்சியளித்தாள்—லலிதாவிற்கு. அவளின் ஆடை ஆபரணங்கள், ஏன்? அந்த அழகிய பங்களாகூட அவளுக்கு சொந்தமில்லை போலிருந்தது. எங்கு பார்த்தாலும் ஒரே வெறுப்பு. இனியும் அங்கு நிற்க முடியாமல் மாடியிலிருந்த தன் அறையை நோக்கிச் சென்றாள்.

அப்பொழுது இரவு மணி எட்டிருக்கும். லலிதாவின் மனதைப் போலவே அன்று வானம் கருத்து தடித்திருந்தது. சரசரவென ஓடும் மேகங்கள் எழுப்பும் இடியோசை அவள் உள்ளக் குமுறலுடன் போட்டியிட்டன. வேதனை நிறைந்த இதயத்தின் 'கனத்தை'த் தாங்கியபடி எதிரிலிருந்த ஜன்னல் கம்பிகளில் தலையைச் சாய்த்துக் கொண்டாள்.

மின்னல்களை 'பளிச் பளிச்' சென்று இறைக்கும் இருண்ட வானத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தது அவள் பார்வை.

ஜன்னலுக்கு நேரே தளிர் விட்டுக் குலுங்கிக் கொண்டிருந்தது ஒரு அரசமரம். வானிலிருந்து பெய்யும் சிறு சிறு 'தூரல்கள்' அதில் 'சல சல' நாதத்தைக் கிளப்பிக் கொண்டிருந்தன. சொட்டுச் சொட்டாய் விழும் மழை ஜலம், ரம்பம் போன்ற அதன் இலைகளிலிருந்து கிளைகளில் விழுந்து கொண்டிருந்தது. கொஞ்சம் கொஞ்சமாய் வழிந்த ஜலம் அதிகமாகப் பெருக்கெடுத்து மரத்தின் வேரை நோக்கி வேகமாய்ச் சென்று கொண்டிருந்தது.

லலிதாவின் சிந்தனைத் துளிகளும் சிறிது சிறிதாய்ப் பெருகி, காலத்தின் கிளைகளின் வழியாகப் பிரவாக மெடுத்து பழைய நிகழ்ச்சியாகிய அடிமரத்தின் வேரை நோக்கிப் பாய்ந்து சென்றது.

*  *  *

அன்றும் இதே மழை காலந்தான். இடி. மின்னல் இவற்றின் வேகம் அன்று உக்ரமா யிருந்தது. நடுநிசி. லலிதா அவள் அறையில் தூங்கிக் கொண்டிருந்தாள். ஆகாயத்தில் சிறு சிறு குமுறலுடன் உருண்டு கொண்டிருந்த இடி, கறு வைத்து பக்கத்திலிருந்த ஒரு மாடி வீட்டில் "படார்..." என விழுந்தது.

நிச்சிந்தையாய் படுத்துக் கொண்டிருந்த லலிதா படுக்கையோடு திடீரென்று தரையில் விழுந்தாள். வானளாவிய தீ சுவாலை அவள் கண்களில் பட்டது. அவளின் மிருதுவான தளிர்மேனியினால் அந்த பேரிடியையும், தீயையும் தாங்க முடியவில்லை. சிறகொடிந்த பறவையைப்போல துடிதுடித்தாள். "பெரியம்மா .." "பெரியம்மா..." என்று அலறியபடி அறையின் கதவுகளை தடார் தடாரென திறந்து கொண்டு மாடிப் படிகளின் வழியே மடமடவென இறங்கினாள்.

அப்பொழுதுதான் படிகளின் வழியாய் வந்து கொண்டிருந்தது ஒரு உருவம். திடுதிடுவென வந்த அவள் அதன்மீது ஒருதரம் மோதினாள். மறுகணம் பீதியினால் பெரியம்மா வென நினைத்து இறுகக் கட்டிப் பிடித்தாள். அதன் தோளின்மீது தன் முகத்தை அழுத்திப் புதைத்துக் கொண்டாள்.

வானத்தின் துடிதுடிப்பு சிறிது சிறிதாய் தணிந்து கொண்டிருந்தது. லலிதாவின் 'குலை நடுக்கமும்' மெதுவாய் சரிந்து கொண்டிருந்தது. அதுவரை பதறும் அவளின் மேனியை தடவியபடி ஆஸ்வாசப் படுத்திக்கொண்டிருந்தது அவ்வுரு. மெதுவாய் தலை உயர்த்திப் பார்த்தாள். பளிச்சென்று மின் வெட்டியது.

ஆ!......முன் பின் அறியாத ஒரு ஆடவன் அது. நன்றியறிவுடன் அவனைத் தன் கயல் விழிகளால் பார்த்தாள். நாணத்தின் காந்தத்தால் நா குழறக் கேட்டாள்.

"நீங்கள்...........யார்?"

"நான் ஒரு திருடன். உங்கள் வீட்டிலுள்ள உயிலொன்றைக் கைப்பற்றவே வந்தேன்."

"தங்களின் நடையுடைகளைப் பார்த்தால் அந்தஸ்துள்ள குடும்பத்தினராக வன்றோ தோன்றுகிறது? இல்லை மறைக்காதீர்கள்."

"நான் சொல்வது முற்றிலும் வாஸ்தவமே. ஆனால், எதிர்பாரா இந் நிகழ்ச்சியால் நான் அதை மாற்றிக் கொண்டேன். அந்த உயிலில் நானும், ஒரு பெண்ணும் சம்பந்தப் பட்டுள்ளோம். அது நீதான் போலும். அப்படியானால் உயில் உன்னிடமே இருக்கட்டும்......"

இப்படியே பேசிக் கொண்டிருந்த அந்த 'அதிசய' மனிதனின் உருவை அசையாது நோக்கிக் கொண்டிருந்தாள் லலிதா.

சிலு சிலு வென காற்று வீசியது. நிறைந்த குளிர்ச்சி அதில் தேங்கிக் கிடந்தது. பேசிக் கொண்டிருந்த அந்த வாலிபன் இதயத்தை உணர்ச்சி கொண்டு நிரப்பியது அது.

வனிதையின் வதனத்தை ஒரு கணம் ஆழ்ந்து பார்த்தான். குளிரினால் நடுங்கும் அந்த ரோஜா இதழ்கள் "வா! வா!!" வென அழைப்பதாய் தோன்றியது அவனுக்கு. லலிதாவின் முகத்தை தன் கரங்களால் 'சட்'டெனப் பற்றினான். துடி துடிக்கும் தன் உதடுகளை மிருதுவான அவளின் அதரங்களில் வைத்து 'இச்'சென்று வைத்தான் ஒரு முத்திரையை. வெளுத்திருந்த அந்த இதழ்களில் சிவப்பேறியது. எல்லாம் ஒரு நொடியில்.

"வருகிறேன்"—என்றபடி வாயிலை நோக்கிச் சென்றான். அவனைத் தொடர்ந்து வந்த லலிதா, "ஐயோ! காரிருளைப் பிளந்து செல்கிறாரே!... அவருக்கொன்றும் நேராதிருக்க வேண்டுமே...!" என எண்ணமிடலானாள். முன் பின் அறியாத அந்த மனிதனின் மேல் அவளுக்கு எங்கிருந்தோ ஓர் அன்பு தோன்றியது. ஒரு வேளை'அது' காதலா யிருக்குமோ?.........

* * *

"சாப்பிட வரலையா, லலிதா"...பெரியம்மாளின் இந்தக் குரலொலி அவளைச் சிந்தனைக் கடலினின்றும் எழுப்பியது. இரவில் சரியானபடி நித்திரை செய்யக் கூட முயலவில்லை அவளால். இன்ப லாஹிரியைத் தந்த 'அந்த முத்தத்தின்' எண்ணம் தான் சதா.

பொழுது புலர்ந்தது. அவளின் ஆயுளிலேயே வெறுப்பு தோய்ந்து கிடந்த நாள் அதைப் போல வேறெதுவுமில்லை. சரியாய் பத்துமணிக்கு காரில் வந்து சேர்ந்தான் அந்த துரதிர்ஷ்டம் பிடித்த அநாமதேயப் பேர்வழி. வழக்கமான அலங்காரங்களைக் கூட செய்யாதிருந்த லலிதாவிற்கு அவன் முகத்தில் விழிக்க கட்டோடு பிடிக்கவே இல்லை. எனினும், அவளிஷ்டப்படி வருகிறதா அந்த குரங்கு மனம். அவலக்ஷணம் வடியும் அவன் முகத்தைத் தான் பார்ப்போமே! என்றபடி அவளின் தலையை வலுவில் தூக்கி விட்டது மேலே. ஹாலின் நடுவே இருந்த அவனின் உரு, ஜன்னலின் வழியாய் தெளிவாய் அவளின் கண்களில் பட்டது.

அவளால் நம்பவே முடியவில்லை. வெறுப்புடன் பாய்ந்த அவள் நயன ஒளிக்கதிர்கள் அப்படியே நிலைத்து விட்டன. சிறிது நேரத்தில் அவளின் கண்ணிமைகள் ஒன்றோடொன்று மள மள வென கொஞ்ச வாரம்பித்தன. ஆமாம்! அவ்வளவு படபடப்பு அவற்றிற்கு! "ஆ! என்ன ஆச்சரியம்!! ஸ்ரீதரன் என்பது இவரா! அன்றிரவில் என்னைக்காத்த அந்தப் பிரபுவா!... இனியும் அந்த அலங்கோல உடையுடனிருக்க லலிதாவினால் முடியுமா? குடு குடு வென ஓடினாள்; முகத்தை அலம்பி பவுடரையும், ஸ்நோவையும் இட்டுக் கொண்டாள்; தலையை வாரி பின்னினாள்; கண்ணாடியின் முன் நின்று முகத்தை சரிப்படுத்திக் கொண்டு கதவிடுக்கின் வழியாய் ஸ்ரீதரனையே கவனிக்கலானாள்.

லலிதாவையே தேடித் தேடி அலைந்து கொண்டிருந்த ஸ்ரீதரனின் அந்தக் கண்கள் அவளைப் பார்த்து விட்டன. தன்முயற்சியில் வெற்றியும் எய்தின. சின்னேரத்தில், இரு ஜோடி நயனங்களும் 'குசலம்' விசாரிக்கத் தொடங்கின.

யாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தாள் பெரியம்மா. முன்பு குதித்து ஆர்ப்பாட்டம் செய்த லலிதா பெட்டிப் பாம்பாய் அடங்கிவிட்டது. ஒரே ஆச்சரியம்!...ஆமாம். இந்த சிறுசுகளே இப்படித்தான். ஆ! ஊ!

என்று முதலில் குதிக்கும். ஆம்படையானைக் கண்டு விட்டால் இருந்த இடம் தெரியாது ஒடுங்கி விடுங்கள். ஹூம்! எல்லாம் சகஜந்தானே!

* * *

அன்றொரு நாள் இரவு, 'பைக்'குடன் லலிதா 'ரேஸ் கோர்ஸில்' நின்று கொண்டிருந்தாள். சிறிது தூரத்தில் மறைக்கப்பட்ட விளக்கு வெளிச்சம் பரவியிருந்தது. எவ்வளவோ எண்ணங்கள் அவளுள்ளத்தில் புரண்டு கொண்டிருந்தது அப்போது. விர்ரென்று வந்த காரொன்று அவளருகில் திடீரென நின்றது. அதிலிருந்து ஒரு குரல். "ஆஸாத் ரோடுக்கு வழி எது அம்மா!"...ஆ! ஸ்ரீதரனுடையதல்லவா அது! அவரால் என்னைத் தெரிந்து கொள்ள முடியவில்லையா? ஐயோ! பாழும் 'பிளாக் அவுட்டே!'...இப்படியே சிந்தித்துக் கொண்டிருந்த லலிதா, மறு நிமிடத்தில் திடுக்கிட்டாள்.

"நாங்கள் கேட்பது உனக்கு புரியலையா?" என்ற ஒரு பெண் குரல் தான் அதற்குக் காரணம். பதிலை எதிர்பாராமலே கார் புறப்பட்டது. இந்த அசட்டுப் பெண்ணை ஏளனம் செய்யும் அவர்களின் சிரிப்பின் ஒலி சிறிது சிறிதாய் மறைந்து கொண்டிருந்தது.

"அட பாபி! காருடன் ஒரு காதலியா? என்னை விரும்புவதெல்லாம் வெறும் பணத்திற்குத்தானா? உன்னையா மனதாரக் காதலித்தேன் நான்? இனி உன் முகத்திலும் விழிக்கமாட்டேன்," எனத் தீர்மானித்தாள் லலிதா. பாவம்! காரில் வந்தது ஸ்ரீதரனின் தங்கையென்று அவள் எப்படி அறிவாள்? அன்றைய சம்பவத்தினால் லலிதாவின் மனம் முறியவாரம்பித்தது. ஆனால் 'அந்த முத்தத்தின்' நினைவு வரும்போதுமட்டும் அந்த முறிவின் சுழற்சி சிறிது தளருமோ என்னமோ?......

* * *

காஸ்மோபாலிடன் கிளப்பின் வருடக் கொண்டாட்டம். மெம்பர்கள் ஒவ்வொருவரும் தத்தம் குதிரைகளுடன் பந்தயமிட்டு மகிழ்ந்து கொண்டிருந்தனர். லலிதாவிற்கு அன்று ஏக குஷி. காரணம், அவளுடைய 'ஜான்' அன்று ஓடியதே ஒரு அலாதி அழகுடன் விளங்கியதுதான். 'ஹப்'......'ஜம்ப்!......'க்விக்'......என்றெல்லாம் ஜானை உற்சாகமூட்டி விட்டாள் லலிதா. 'ஜான்' ஜயிக்கப் போகிறது என்ற ஆவலால் லலிதாவின் கரங்கள் 'அப்ளாஸில்' நுழைந்து விட்டன.

அடடா! அதென்ன! பின்னால் வந்த 'ஜாக்கி'க்கு இவ்வளவு வேகம் எங்கிருந்து வந்தது. என்ன! ஜானை முந்தி விட்டதா! அதற்குத்தானா முதலிடம். பொல்லாததப்பா இந்த 'ஜாக்கி.' இப்படியா மண்ணைத் தூவுவது லலிதாவின் ஆசையில்.

எல்லோரையும் ஆச்சரியக் கடலில் அமிழ்த்திய அக் குதிரை யாரைச் சேர்ந்தது? என்ன!...ஸ்ரீதரனுடையதா?

எதிர்பாராத இந்தத் தோல்வியினால் லலிதாவின் இதயத்தை பூர்ண அதிருப்தி கௌவ ஆரம்பித்தது. இதைவிட ஸ்ரீதரனுடைய குதிரை அது என்று தெரிந்ததும் வரம்பு மீறிச் சென்றது அவள் கோபம்!

"சனியன் எங்கு போனாலும் குறுக்கே வந்து விடுகிறது." இப்படியே ஸ்ரீதரனை மனதிற்குள் சபித்தபடி பாலத்தின்மேல் சென்று கொண்டிருந்தாள் லலிதா. பாலத்தினடியிலுள்ள பிரவாகத்தின் சுழற்சி, மோதல், தெளிவு, சுளிவு எல்லாம் அவள் உள்ளப் புரட்டலை ஒத்திருந்தன.

"லலிதா !...லலிதா !......"

வெதும்பிய மனதோடு சென்று கொண்டிருந்த லலிதாவிற்கு ஸ்ரீதர னின் குரல், மேலும் வெறுப்பையே நல்கியது. எக்காரணத்தாலோ அவள் நடையிலிருந்த விரைப்பு மட்டும் தணிந்துகொண்டே வந்தது. ஸ்ரீதரன் அருகில் நெருங்கிவிட்டது போலும் தோன்றியது.

"என்னைக் கண்டாலே பேசமாட்டேன் என்கிறயே. ஏன் லலிதா !"

ஸ்ரீதரனின் பேச்சை அவள் செவி கொடுத்து கேட்டதாகவே தோன்ற வில்லை. பதிலுக்கு முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டாள்.

"ஜாக்கி, ஜயித்து விட்டதென்ற கோபமா? வேண்டுமானல் அதை நீயே வைத்துக்கொள்ளேன். லலிதா !...உன்னை எவ்வளவு காதலிக்கிறேன் தெரியுமா ?......"

லலிதா பேசவே இல்லை. தனிமையி லிருந்த ஸ்ரீதரனல் அவளின் மௌனத்தைச் சகிக்கவே முடியவில்லை. பிரேமை உந்த, வெற்று வெளி யையே பார்த்துக் கொண்டிருந்த அவளின் கரத்தை மெதுவாய் பற்றினன்.

திடீரென்று நெருப்பு பற்றியதுபோ லிருந்தது அவளுக்கு. உடம் பெல்லாம் ஒரே தகிப்புக்கனல்; ஒரே ஆவேசம். இவனை விட்டு தூரப்போய் விட வேண்டுமென்ற எண்ணமே அவள் முன்னிருந்தது. உள்ளத்தி லெழுந்த ஆக்ரோஷத்தின் கொந்தளிப்பால் தன்பலம் கொண்ட மட்டும் அவனை உதறித் தள்ளினள்.

இப்படி நேருமென்று எண்ணினவள அவள்? அல்லது, பாலத்தின் ரெயில் கம்பிகள் தான் தன்னை நழுவவிடுமென எதிர்பார்த்தவள ?......

"தடால்"......என்ற ஒலி ஓடிக்கொண்டிருந்த ஆற்றின் "ஜோ" சப்தத் தையும் மீறி, பிறிக்கொண்டு கிளம்பியது. ஆற்று ஜலமும் ஆளுயரம் மேலெழும்பி தணிந்தது கூடவே.

திடுக்கிட்டாள் லலிதா. இந்த கோரக் காட்சியைக் காணச் சகியாத அவள் மனம் 'அடி கொலைகாரி !......அடி கொலைகாரி !!......" என அலற லாயிற்று. அவளையு மறியாமல் 'ஓ' வென அழுதுவிட்டாள். ஆனல் அவ ளின் கால்கள் மட்டும் எதிர்கரையை நோக்கி ஓடுவதில் தவறி, தயங்கியதே இல்லை.

அதிர்ஷ்ட வசம். இல்லை. அவள் செய்த பூஜாபலன். துடுப்பு தள் ளிக்கொண்டு வந்த அந்த ஓடக்காரன் மட்டும் இல்லாமலிருந்தால் இந்நே ரம் ஸ்ரீதரன் பேயாகவோ அல்லது பிசாசாகவோ மாறி இருப்பான்.

*   *   *   *

திடீர் நிகழ்ச்சியா லேற்பட்ட மூளை அதிர்ச்சி: குணமாக பல [illegible] ளாகும்—எனக் கூறி விட்டார் டாக்டர். அதற் கேற்றாற் [illegible], "[illegible] மாட்டாயே. , லலிதா!"—என்ற ஸ்ரீதரனின் பிதற்றலும் [illegible] யமாகத்தா னிருந்தது. இந்தக் காலங்களில் எல்லாம் அல் [illegible] பகலும் அவனைக் காத்து 'நர்ஸா'க இருந்து வந்தாள் லலிதா. நர் [illegible] பின்போதே அவ ளின் பிரேமைக் கயிற்றிலும் சிறு சிறு முறுக்கு [illegible] றிக்கொண்டே இருந் தன.

காலண்டரிலிருந்து மாதங்கள் பல ஒன்றன்பின் ஒன்றாக நழுவிக் கொண்டே இருந்தன. ஸ்ரீதரனின் நோயும் நாளடைவில் குறைந்தபடி பூர்ண சுகத்தை எய்திற்று.

வியாதி குணமடைந்த அன்று மாலை, ஸ்ரீதரனும் லலிதாதவும் 'பூங்கா' வழியாகப் போய்கொண்டிருந்தனர். ஆகாயத்தில் அன்று மெல்லிய மேகத் துகில் படர்ந்திருந்தது. அஸ்தமிக்கும் சூரியனின் கடைசிக் கிரணங்கள் அம்மேகத்துகிலில் செம்பஞ்சைத் தோய்த்தன. நடுவான் வரையில் செவ்வே லென்று இருந்தது. எதிர்க்கரையிலுள்ள வயல் வெளிகளிலும் அவ்வர் ணக் குழம்பே. நதியின் புனல் உருக்கிய தங்கமாகத் தோன்றியது. சூரிய ஒளியின் ஒரு கீறல் அகன்ற விண்ணிடையே தயங்கிக் கிடந்தது.

மெதுவாய் நகர்ந்துகொண்டிருந்த அவர்களின் தலைக்குமேலே "கீ! கீ!" என்ற சப்தம் கேட்டது. அண்ணாந்து பார்த்தனர்.

பச்சைப் பசேலென்ற ஒரு விருக்ஷம். அதிலே இரு சிவந்த அலகுகள். பக்கத்திலிருந்த அந்தக் கனியைத் தோற்கச்செய்யும் சிவப்புவர்ணம், அவற் றில் தீட்டப்பட்டிருந்தது. பச்சை இலைகளினூடே இருந்த அக்கிள்ளை களின் பச்சைமேனி அவர்களுக்கு தென்படவில்லை, அந்த லாண்ய செவ் வரி அலகுகள்தான் இக்காதலரின் கண்களுக்குப் புலப்பட்டன. அலகுக ளிரண்டும் தொட்டுக்கொண்டன; உராய்ந்தன; கொஞ்சின. பரந்த இட முழுதும் 'இச்; இச்' என்ற நாதமே!

அன்பால் பிணைக்கப்பட்ட அவர்களின் சிரசுக ளிரண்டும் தாழ்ந்தன. ஒன்றையொன்று பார்த்தன. ஒரு ஒளி: தெய்வீக ஒளி: காதல் ஒளி ஜோடியான நயனங்களி னின்றும் கிளம்பிற்று. சிறிது சிறிதாக அதன் 'சாரம் கண்களின் வழியே ஜீவநரம்பின் மூலம் அவர்களின் பிரேமை உள்ளத்தில் சென்று கலந்தது. இன்பம் நிறைந்த அந்த இதயங்களி லிருந்து. ஒரு 'இன்ப நினைவு' தலைதூக்கியது.

இருவரும் நொடியில் அதை உணர்ந்தனர்; புரிந்து கொண்டனர்; அவாவினர். எதைப்பற்றி இருக்கும்?......எல்லாம் "அந்த......தை" தவிர வேறேதாய் இருக்கமுடியும்?

வாலிபக் காதலரின் அதரங்கள் உள்ளச்சாயலை சிறு சிறு துடிப்புகள் மூலம் வெளியிட்டு, படர்ந்து, மின்னிட்டன. லலிதாவின் அந்த குவளை இதழ்க்கோடுகளில், கொஞ்சம் கொஞ்சமாய் ஊறி—சுரந்து கொண்டிருந் தது ஜீவரசம்.

"......................................"

விரிவாய் படர்ந்து மறைத்துக் கொண்டிருக்கும் இந்த வாழை இலையை சிறிது நீக்கிப் பாருங்கள்.

அதோ! அதோ!......இன்பநிலை எய்திய அக் காதலர்கள் தம் இதழ் களை முத்தங்களால் நிரப்பிக் கொண்டிருக்கின்றனர்.

---

# திருவிளக்கு

('கார்த்திகேயன்')

அன்புள்ள தோழி கமலவல்லிக்கு,

கமலா! உன் கடிதம் கிடைத்தது. நீ புதிதாக ஒரு திருவிளக்கு வாங்கியிருப்பது கேட்க எனக்கு மிக்க மகிழ்ச்சியாயிருக்கிறது. நீ எழுதியிருப்பது போல் விலை அதிகந்தான் என்றாலும், அது மங்களகரமான விளக்கு! அது எத்தனை கொடுத்து வாங்கினாலும் தகும் என்பது என் கருத்து.

என் வீட்டிலெல்லாம் மின்சார விளக்குகள் எரிவது உண்மைதான். ஆனாலும், ஒரு திருவிளக்கு இத்தனை விளக்குகளும் ஈடாகமாட்டா என்று சொல்லுவேன். மின்சார விளக்குகள் ஒளி மிகுந்தவை; ஒரு விளக்கே பேரொளி பரப்பவல்லது; எத்தனையோ நிற ஒளிகளையெல்லாம் மின்சார விளக்குகளில் உண்டாக்கலாம் என்ற இவை யாவும் மெய்யேயாயினும், ஆரோக்கிய ஒளி வீசத்தக்க உன் திருவிளக்குக்கு இவை ஒப்பாகா.

மின்சார விளக்கின் ஒளி கண்ணை வெருட்டும் அத்தனை சோதியைப் பொழிகிறது. கண்கள் கூசுகின்றன. நாளடைவில் அந்தக் கூச்சமும் மாறி எத்தனைப் பேரொளியும் கண்களுக்கு இயல்பாகி விடுகின்றது. ஆனால் குறைந்த வெளிச்சத்தில் அவை தங்கள் பார்வையைப் பெரிதும் இழந்துவிடுகின்றன. சில கண்ணாடியின் உதவியையும் நாடுகின்றன.

கமலா! இதற்கென்ன காரணம்? பகலில் சூரிய ஒளி இரவில் கண்ணைப் பறிக்கும் மின்சார ஒளி என்றால் கண்கள் கெடாமல் என்ன செய்யும்? இயற்கையின் இருளை செயற்கை வெளிச்சத்தால் மாற்றிப் பகல்போல் செய்வதென்றால் கண்கள் எவ்வளவு காலந்தான் ஒளியைக் கண்டு சலிக்காமலிருக்க முடியும்!

மேலும், இந்த மின்சார விளக்கை கண் பார்க்கவும் முடியவில்லை. சற்று நேரம் இடையறாது நோக்கினால் கண்ணுக்கு எரிச்சல் உண்டாகிறது. ஆனால் அந்தத் திருவிளக்கை எவ்வளவு நேரமானாலும் சலிக்காமல் பார்த்துக் கொண்டிருக்கலாமே! அந்த ஜோதியைப் பார்க்கும் போது தான் கண்களுக்கு எத்தனைக் குளிர்ச்சி! எத்தனை இன்பம்! தீப ஒளி பார்ப்பவர் உள்ள ஒளியாகவன்றோ மாறுகிறது!

கமலா! வாரங்களிற் சிறந்த சுக்கிரவாரம். அதையே நம் இந்துக்கள் சுபதினமாகக் கருதுகின்றனர் வெள்ளிக்கிழமைகளிலே ஆலயங்களில் உயர்ந்த அபிஷேகங்கள், ஆராதனைகள் அலங்காரங்கள், அம்பிகை புறப்படும் சேவைகள் முதலியன நடைபெறுதல் வழக்கம். அந்தக் கிழமையிலேயே கோவில்களுக்கு மக்கள் திரளாகச் செல்வர். அத்தகைய சிறந்த வெள்ளிக்கிழமையிலே இல்லங்கள் தோறும் குத்துவிளக்கேற்றி வைத்திருந்தால் என்ன அழகாயிருக்கும்!

இதனால் வெள்ளிக்கிழமை மட்டுந்தான் இந்தத் திருவிளக்கேற்ற வேண்டுமாக்கும் என்று எண்ணிவிடாதே! எல்லா நாட்களிலுமே அந்தி நேரத்தில் பூசை மாடத்தருகே குத்து விளக்கு ஏற்றி வைப்பது நல்லதே.

தினமும் மாலையிலே விளக்கேற்றி வைக்கும் இடத்தைக் கூட்டிப் பெருக்கி மெழுகிச் சுத்தி செய்து கோலமிட்டு வை. திரு விளக்கைப் பளிச்சென்று ஒவ்வொரு நாளும் துலக்கிவை. அந்தி நேரத்தில் விளக்குக்கு எண்ணெய் திரி முதலியன இட்டு எரிய விடு. அதற்குப் பூச்சூட்டிக் குங்கும பொட்டிட மறக்கவேண்டாம். அதைத் தொழுது வணங்கி உன் குறைகளை நீக்குமாறு பிரார்த்தனை செய்.

உங்கள் ஊரிலே மண்ணெண்ணெய் கிடைப்பது அரிதாயிருக்கிறது என எழுதியிருக்கிறாய். அதற்காக, இனி நீ விசாரப்பட வேண்டியதில்லை. இடைக்காலத்திலே வந்த மண்ணெண்ணெய் இந்த யுத்த காலத்தோடு ஒழியட்டும். நம் நாட்டிலே கிடைக்கக் கூடிய கடலை, ஆமணக்கு, புன்னை, இலுப்பை முதலியவற்றின் எண்ணெயை நாம் எல்லோரும் இனி உபயோகிப்போமாக. உள்ள வீடுகளில் குத்துவிளக்கு எரியட்டும்; இல்லாத வீடுகளில் அகல் விளக்கு எரியட்டும்.

கமலா! நான் பல வீடுகளில் கண்டிருக்கிறேன். மண்ணெண்ணெய் விளக்குகள் எரிந்து மாடங்களும், சுவர்களும் கரிப்பிடித்து, கூரைகளும், சுவர் மூலைகளும் ஒட்டடைப் பிடித்து வீடுகள் அழுக்கடைந்திருப்பதை. ஆகவே, மண்ணெண்ணெய் தொலைந்தால் வீடுகள் சுத்தப்படும். சிறுவர்களது கண்களும் புகையடைந்து இருண்டு போகா.

கமலா! என் அன்பான தோழீ! மேலே நான் சொல்லியவாறு உன் திருவிளக்கை நல்லதொரு வெள்ளிக்கிழமையிலே முதன் முதலாக ஏற்றி வை. மற்றவிடங்களில் கூட கல்விளக்குகளும் அகல் விளக்குகளும் எரியட்டும். அப்போது உன் வீட்டைக் கூர்ந்து கவனி. உன் உள்ளத்திலே ஒரு நூதன அமைதியும், ஆனந்தமும் உண்டாகின்றனவா இல்லையா, பார்!

ஒவ்வொரு நாளும் அந்தத் திருவிளக்கின் சுடரொளியை சற்று நேரம் அமைதியோடு இருந்து கவனித்து வா! ஒரு புதிய மடந்தை உன் வீட்டினுள் தாண்டவம் புரிவது உனக்குத் தெரிய வரும் அவள் தான் திருமடந்தை? என் ஆருயிர்த் தோழீ! அவள் என்றும் உன் இல்லத்திலே ஒன்றியிருக்க நீ அவளைப் பிரார்த்தனை செய்! தினமும் உன் திருவிளக்கு சுடர் விட்டு எரியட்டும்!

இங்ஙனம்,

உனது அன்புள்ள

**கோமளவல்லி.**

# சிதைந்த சித்தூர்

(தேவிகா.)



ஆம், அந்தக் காலம் மிகவும் மோசமான காலம்; அடக்கு முறையற்ற காலம்; ஒற்றுமை சிதைந்த காலம்; சாம்ராஜ்ய சிதைவுச் சின்னங்கள் பிரகாசித்த காலம்; ஒரே தாய்க்குப் பிறந்த சேய்களுக்குள்ளேயே பிணக்கு; அந்நியருக்குத் தாம் பூலங் கொடுத்து வரவழைக்குங் காலம்; வீரங் குன்றிவரும் நிலை; சோகம், மனச் சோர்வு, வாழ்வுதாழ்வு, இவைகளெல்லாம் தாண்டவ மாடும் நிலைமை.

இந்த அலங்கோல காலத்தில்தான் கஜினி வம்சம், கோரி வம்சம், கில்ஜி வம்சம், இப்படி படிப்படியாக் அந்நியர் நம் சுதந்திரத்தைப் பிடுங்கி இன்பம் உறுஞ்சிய காலம். இந்திய சரித்திரம் தரும் சம்பவங்கள் இவைகள்.

ஆம், இப்போது கில்ஜி வம்சத்திய ஒரு அரசனைப் பற்றிய சம்பவத்தைத்தான் சொல்லப் போகிறேன் உங்களுக்கு.

கி. பி. 1294ல் டில்லியில் கில்ஜி என்ற மகமதிய வம்சத்தைச் சேர்ந்த அரசன் ஒருவன் ஆண்டான். அவ்வரசனின் சகோதரன் குமாரனாகிய அல்லாவுதீன் அவரை வஞ்சகமாகக் கொன்றான். பின்னர் அமர்ந்தான் அரி ஆசனத்தில்.

முதலில் குறிப்பிட்டேனல்லவா அல்லாவுதீன் என்பவனை, அந்தக் கொலைபாதகன் அல்லாவுதீனைப் பற்றித்தான் நான் சொல்லப் போகும் கதை.

தந்தையைக் கொன்றான் தான் அரசாளுதற்கு. கிராதகன், மதியீனத்தின் உயர் குன்றைத் தாவிப் பிடித்திருந்த நிலைமையில் அவ்விதம் செய்யத் துணிந்தான்.

வஞ்சம் செய்தானே தந்தையை! ஆனால்—அவன் கோழையா? இல்லை-தைரியசாலி—வீரம் வாய்ந்தவன்—சாமர்த்தியசாலியுங்கூட.

ஆனால், வாக்குறுதி யற்றவன். தயை இல்லாதவன். அந்தக் காலம் இந்தியாவில் மகம்மதியர் குதூகலித்த காலமானாலும், இஸ்லாம் மதத்தைப் பின் பற்றும்படி வற்புறுத்தப் பட்டாலும்—இந்துமதம் அவ் வற்புறுத்தலையும் சமாளித்து, புது ஒளியுடன்—புன்னகை முகத்துடன்—மோனம் திகழ்ந்து—இந்து மதத்தினர்க்குப் புதிய தெரு மன ஊக்கத்தையும்—பீம பலத்தையும்—இராவண வீரத்தையும் அள்ளி வீசி ஆனந்த ஜோதியைக் கொடுக்காம லில்லை.

மதப் பித்துப் பிடித்த அல்லாவுதீன், மகமதிய ராவதற்கு மறுத்தாரையெல்லாம் வாளுக் கிரையாக்கினான். என்னே. இவனது இருட்டு மதி!

இப்படிச் செய்து வந்த அவனுக்கு மனம் இளகி விட்டது போலும்! பிறப்பித்தான் ஓர் சட்டம்; இஸ்லாம் மதத்தைப் பின் பற்றாதவர்கள் ஜிஸியா என்ற வரி கொடுத்தால் போது மென்று.

1298ல் கூர்ஜரம் அவனுக்கு அடங்கிற்று-கணக்கற்ற நிதி களைக் கட்டிக் கொண்டு போனதோடு காரிகைகள் 2000 பேர்களை யும் இட்டுச் சென்றான். அவர்களுள் அழகு மிக்காளான கமலா தேவியை அரசியாக்கிக் கொண்டான்.

சித்தூரை ராணா பீம்சிங் ஆண்டு வந்தான். ராஜபுத்ர அர சனை ராணா அல்லது ராய் என்று கூப்பிடுவ துண்டு.

ராஜபுத்திரர்கள் மானங்கெட வாழார்கள். சண்டையில் இறப் பதே அவர்களின் ஜீவிய இன்பக்கேணி. தம்பதிகளுள் ஒருவர் மடிந்தால் மற்றவர் உயிர் வாழார். மிஞ்சியவர் தீக்குளிப்பார்.

ராணா பீம் சிங்கின் மனையர்ளின் பெயர் பத்மினி. அவள் ஒரு பேரழகி. அவளது பெயரைக் கேட்டு மணம் புரிய துராசை கொண்டான் அல்லாவுதீன் கில்ஜி.

உடனே சித்தூரை 1301ல் முற்றுகை யிடுகிறான். வீரங் குமுறி யெழும் அந்த ராஜபுத்திரர்களா இதற்கு அஞ்சுவர்! எழு கின்றனர் திரளாக ஒருங்குகூடி எதிராளிகளைச் சுக்கலாக்குதற்கு.

தடால்—குபீர்—டுமீல்...என்று சப்தங்கள். பீரங்கிகள் கரும் புகையுடன் கலந்த விஷ உணவை எதிரிகளுக்குப் பரிமாறுகின் றன. துப்பாக்கிகள் தங்கள் குரல்களை பயங்கர ஓசையில் ஆழ்த்துகின்றன.

ராஜபுத்திரர்களின் யுத்தக்கனல் மக்மதியர்களைப் பொசுக்கு கின்றது. ஆனாலும் அத்தப் பொல்லாத பெண்ணாசைப் பேய்ன் அல்லாவுதீன் விடுவதாகவு மில்லை.

இருதரத்தினரும் ஒரு முடிவுக்கு வருகின்றனர்—அல்லாவுத் தீன் பத்மினியின் உருவத்தை நிலைக்கண்ணாடியில் பார்ப்ப தென்று.

அல்லாவுதீனும் அவளது நிலா முகத்தைப் பார்க்கிறான். காமத்தின் உச்சியைத் தழுவி முத்தம் பறிக்கின்றான். பெரிய தீர் மானம் ஒன்று அவனுக்குத் தோன்றி விடுகின்றது பத்மினியை எப்படியாவது அடையவேண்டுமென்று.

செல்கிறான் திரும்பி டெல்ஹி நகர் நோக்கி.—காலச் சக்கரம் இரண்டாண்டுகளைத் தாண்டிச் சுழல ஆரம்பித்தது.

நீலவானைக் கோலஞ்செய்து கொண்டிருக்கின்றது வெண் ணிலா. மணித்தென்றல் ஜில்லென்று வீசுகிறது. அரண்மனைத் தோட்டத்தில் உலவுகிறான் அல்லாவுதீன் ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டு. பத்மினியின் பேரழகு இவனது இதய மலரைச் சோரும்படியாகச் செய்கின்றது. முணு முணுக்கிறான். பின்புறம் கைகளைக் கட்டிக்கொண்டு இங்குமங்கும் தளர் நடையாக நடந்து கொண்டு.

அவனை அறியாமலே உள்ளத்திலிருந்து...ஆஹா! என்ன அழகு என்ன விதமான கலை! அவளது சீதளஞ்சிந்தும் நிலாமுகத்தில்—ஒளி தழுவும் கோவை உதட்டில் முத்தம் குவித்தால்... ச்சே...முத்தமா...ஏன் அவளையே தின்றால்...காதல் கடலில் மூழ்கினால்...அடடா...என்ன!...ஆம்...அவளே எனது இன்ப நாதம். இதய ஒலி, ஜீவியப் பிழம்பு. பாக்ய மணி. எனது வாழ்வேற்ற இன்பப் பெட்டகத்தின் திறவுகோல் அவளே! எனது குளிர்ந்த ஜீவனின் எட்ட முடியாத உயிரோவியம் அவள் தான்!

எனது ஜீவன் புதுநிலவும்—நவயுகமும்—புது மணமும்—அறிவுக் கனலும் பெற வேண்டுமானால், எனக்கு அவளது சௌந்தர்ய ஜோதி வட்ட விளிம்பின் ஒளித்துளியே போதுமானது இவைகளெல்லாம் அடைதற்கு.

பத்மினி! உன்னைக்கண்டு புளகாங்கித மடைந்து வளர்ந்து வந்த மனக்கொடி இன்று உன்னைக்காணாத ஏக்கத்தால் வாடி வதங்கி சோர்ந்து நிலை தட்டி விட்டதடி...ஆ...ப...த்...மி...னி...

ஆம்...சரி. நமது எண்ணப்பாடு ஏற்றமடைய—பத்மினியை அடைய யுத்தந்தான் மூலப் பொருளாக வேண்டும். இதுவே இறுதி யுத்தம். ஒன்று வெற்றி அல்லது தோல்வி" என்ற பேச்சலைகள் குமுறி எழுந்தன வெளிக் கடலைத் தழுவிக் கொண்டு.

மீண்டும் சித்தூர் அல்லாவுதீனின் முற்றுகைக்கு இலக்காகின்றது. மகமதிய சேனை முன்னைவிட பலம் அதிகமாக இருக்கின்றது இப்போது. கடைசி ஜீவன் உள்ளமட்டும் போர்புரிகின்றனர். ஆனால்...ஆனால் என்ன ராஜபுத்திரர்களின் வெற்றி வட்டம் எதிரி சைன்யத்தால் பின்னப் படுத்தப் படுகின்றது.

10,000 ராஜபுத்திரர்கள், சற்று நேரங்கழித்து 8,000...7,000 கடைசியில் 4,000 3,000 ஆகிவிட்டது. என்ன செய்வார்கள். உயிரை இழக்க வேண்டும் அல்லது அவனது இச்சைக்கு இணங்க வேண்டும். இணங்குகிறார்களா இவனது கட்டளைக்கு! இல்லை.

"கடைசி துளி இரத்தம் கசிந்தோடும் வரையிலும் உங்களை எதிர்த்தே தீருவோம்; இதுவே எங்கள் கடமை. கர்ம வீரன் பணியைச் செய்பவனே யன்றி பலனை எதிர்பார்ப்பவ னல்ல" என்ற உறுதியை மீண்டும் இறுதியாக வைர உள்ளத்திற்கு மெருகு கொடுக்கின்றார்.

எஞ்சியவர்களின் உயிர் மண்டபம் சுக்கலாகின்றது. இனி சமாளிக்க முடியாதெனக் கண்ட இராஜபுத்திர வீரர்களும், வீரர் பெண்டிரும் மஞ்சள் உடை அணிந்து, மல்லிட்டு மாள்கின்றனர் மண்ணோடு மண்ணாயினர்.

அந்த பத்மினி தான் என்ன! அல்லாவுதீனைக் காதலித்தாளா? இல்லை.

"எதிராளியின் கையில் அடிமைப்பட்டு, அடிமை இன்பம் அனுபவிப்பதைவிட விடுதலைப் பெற்று முல்லைச் சிரிப்புடன் யுத்த

# வீரனின் தியாகம்

(சீ த ர.)



உதயப்பூருக்கும் மணிப்பூருக்கும் வெகு நாளாய் யுத்தம் நடந்து வந்தது. ஒரு சமயம் உதயப்பூரைச் சேர்ந்த உதயசிங்கை விரோதிகள் சிறைபிடித்துப் போயினர். யுத்தத்தில் சலிப்படைந்த விரோதிகள், உதயசிங்கை நோக்கி, "ஓ வீரா! இச் சண்டையை வெகு நாள் நடத்த எங்களுக்கு இஷ்டமில்லை. உங்களுடன் சமாதானம் செய்து கொள்ள விரும்புகிறோம். என்ன சொல்லுகிறாய்?" என்றனர்.

உதயசிங்:—அது முடியாத காரியம். என் தேசத்தவர்கள் ஜயம் அடையும் வரை சண்டையிடப் போகிறார்கள். அப்படியிருக்க அவர்கள் ஏன் சமாதானத்தை நாட வேண்டும்.

விரோதிகள்:—ஒரு நிபந்தனையுடன் உன்னை விடுவிக்கிறோம். இச்சண்டையில் ஏற்பட்டிருக்கும் உயிர்ச் சேதத்தை விவரித்துச் சொல்லி உன் தேசத்தவரை சமாதானம் செய்து கொள்ளச் சொல்ல வேண்டும். அதற்கு அவர்கள் மறுத்தால், நீ உடனே இவ்விடம் திரும்பி வந்து விட வேண்டும்.

உதயசிங்:—ஏதோ பார்க்கலாம்; ஆனால், சமாதானம் ஏற்படுவது துர்லபம்.

2. உதயப்பூருக்குத் திரும்பிய வீரனை தலைவர்கள் வரவேற்கிறார்கள். அவன் யுத்த அனுபவங்களை விசாரிக்கிறார்கள்.

---

தேவியின் ஜீவ ஒளியில் கலப்பது தான் பேரின்பம்" என்று தீக்குளித்தாள் வீரப்பெண் பத்மினி.

அலாவுதீன் கடைசியில் கண்டதென்ன!—அழகிய சித்தூரைக் கண்டானா! அல்லது பத்மினியின் கோவை உதட்டைத்தான் தழுவினானா? இல்லை அதற்குப் பதிலாக இடிந்த கோட்டைகளையும்—இரத்தப் பெருக்கையும்—பாழடைந்த அரண்மனையையும் தான் கண்டான்:

கோபம் வெடித்து அல்லாவுதீன் எல்லாக் கட்டிடங்களையும் இடிக்கச் செய்தானாம்; ஆனால் பத்மினி இருந்த அரண்மனையை அணுகியதும் மனம் இளகியதாம் இடிப்பதற்கு. ஏன்? பத்மினி இருந்த இடமென்றா? மோசம் செய்த சூசனைக்காரி என்று பிரேமை கொண்டா!

அந்தப் பிராந்திய மெல்லாமே எழில் ஒழிந்து **சிதைந்த சித்தூராகக்** காணப்பட்டது.

உதயசிங்:—நேயர்களே! இச் சண்டையின் கோரம் விவரிக்க முடியாதது. அதில் இறந்தவர்களும் சிறைபிடிக்கப்பட்டவர்களும் கணக்கிலர்—நானும் சிறையாக்கப்பட்டேன். ஒரு நிபந்தனையுடன் இங்கு வந்திருக்கிறேன். நாம் விரோதிகளிடம் சமாதானம் செய்து கொள்ள வேண்டும்.

தலைவர்கள்—விரோதிகளிடம் சமாதானமா? சுத்த வீரனாகிய நீயா இப்படி பேசுகுறாய்!

உதச்சிங்:—விரோதிகளின் எண்ணத்தைத் தெரிவித்தேன். என் கடமை தீர்ந்தது—இனி உங்களுக்கு என் புத்திமதி. எக்காரணத்தைக் கொண்டும் இச் சண்டையை நிறுத்தாதீர். தங்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தினாலும் — பயத்தினாலு விரோதிகள் சமாதானத்திற்கு நாடுகிறார்கள். அதற்கு சம்மதியாது யுத்தத்தை நடத்தினால் கடைசியில் நாமே வெற்றி பெறுவோம். இது நிச்சயம்.

தலைவர்கள்:—சபாஷ்! உன் யோசனையை மெச்சுகிறோம். இப்பொழுதே ஒரு பெரிய சைன்னியத்துடன் கிளம்பி விரோதிகளை எதிர்த்துச்செல்—அதற்கு நீ தான் தகுந்த வீரன்.

உதயசிங்:—உங்கள் கட்டளையை மறுப்பதற்கு வருந்துகிறேன். நான் உடனே மணிப்பூர் திரும்ப வேண்டும்.

தலைவர்கள்:—எங்கே விரோதிகளிடமா? போதும் உன் விளையாட்டு. சமாதானம் ஏற்பட்டு விட்டால் அங்கு உன் கதி என்னவாகும்.

உதயசிங்:—சத்தியத்தைக் கை விடுவது ஒரு சுத்த வீரனுக்கழகோ. நான் உடனே திரும்ப வேண்டும். என் குழந்தைகளிடம் விடை பெற்றுக் கொள்ளவும், என் மனைவியை தாய் நாட்டு வீர ஸ்திரியாக இருக்கச் சொல்லவும், உங்களை ஊக்கத்தைக் கை விடாது சண்டையிடச் சொல்லவும் தான் நான் இங்கு வந்தேன். இதுவே என் கடைசி விருப்பம்.

தலைவர்கள்:—உன் மன உறுதியை மெச்சுகிறோம். நீயே தியாக புருஷன்.

உதயசிங்:—என் மனைவியையும் குழந்தைகளையும் உங்களிடம் ஒப்படைக்கிறேன். மணிப்பூர் சென்று வருகிறேன்.

3. பிறகு உதயசிங் தன் வாக்கின்படி மணிப்பூர் திரும்பினான். சீக்கிரம் சமாதானம் ஏற்படாததால் விரோதிகள் உதயசிங்கை சந்தேகித்து அவனைத் தயையின்றி கொன்று விட்டார்கள். யுத்தம் விடாமல் நடந்தது. கடைசியில் உதயப்பூரே வெற்றி பெற்றது. உதயசிங்கின் அரிய தியாகத்தை யாரால் மறக்க முடியும்?

(ஒரு ரோமானியக் கதையைத் தழுவியது.)

# படகோட்டி

(எல். வி. எஸ். மணியன்.)



வட இந்தியாவில் கங்கை, சிந்து, பிரம்ம புத்திரா என்ற நதிகள் எங்ஙனம் முக்யத்வம் பெற்றதோ அங்ஙனம் கோதாவரி, கிருஷ்ணா. காவிரி என்ற மூன்று நதிகளும் தென்னிந்தியாவில் என நாம் அறிவோம்.

அவற்றுள் இப்பொழுது நாம் கோதாவரி நதி தீரத்திற்கு செல்வோம். அந் நதிக்கரையில் ஒரு கிராமம் இருந்தது. நூறு வீடுகளுண்டு சுமாராக அக் கிராமத்தில். இப்பொழுது அது பாழடைந்து கவனிப்பாரற்றுக் கிடக்கிறது. அன்னியர்களின் படையெடுப்பினாலும் உள்நாட்டு கலகங்களினாலும் செழிப்பாயிருந்த அக் கிராமத்தில் கழுதைகள் திரிவதைத்தான் நாம் தற்போது காண முடியும்.

செழிப்புற்றிருந்த காலத்தில் நரேந்தர் என்ற பிராமணன் அந்த கிராமத்தில் வசித்து வந்தான். பெரும் பேராசை பிடித்தவன்; பணம் தான் பிரதானம் அவனுக்கு. அக் கிராமவாசிகளுக்கு அவன் ஒருவன் தான் புரோகிதன். வைதீகக் காரியங்கள் யாது நடக்க வேண்டுமாயினும் இவனே பண்டிதனாக வேண்டும். பணக்காரனாயினும்—கேட்க வேண்டுமா நரேந்தரின் சுக்ரதசைக்கு ! காலணா தக்ஷிணை கிடைக்குமென்றால் காதவழி நடப்பானென்றால், அவனது பணத்தாசையை நீங்களே ஊகித்துப் பாருங்கள் !

அவன் பணத்தாசைக்கு உதவி செய்வது போன்றிருந்தது அக்கிராமவாசிகளின் குணம். எதற்கெடுத்தாலும் கடவுள், ஆண்டவன், தெய்வம் என்பவர்கள். குழந்தைக்கு ஜுரமென்றால், தடுக்கி விழுந்தால் தானம், தருமம், கடவுளுக்கு அபிஷேகம், ஊர் பிடாரிக்கு பலி என்னும் மூட நம்பிக்கையுள்ள குடிகள் அக் கிராமத்தில். இதை நன்கு பயன்படுத்திக் கொண்டான் நரேந்தர். தலைவலி, காய்ச்சல், உடம்பு சுகமில்லை என்றால் திருநீறு மந்திரித்துக் கொடுக்கிறேன் தக்ஷிணை இரண்டு ரூபாய் என்பான். இராவெல்லாம் துர்க் கனவு காண்கிறேன் என்றால், பேய் பிடித்துக் கொண்டது. முனியடித்து விட்டது; பேய் ஓட்டுகிறேன். ரக்ஷை கட்டுகிறேன் எடு பணம் என்பான். அவனுக்கும் நற்காலம் இருந்தது. 'நம்பினால் நடராஜா, நம்பாவிடில் யமராஜா' என்ற பழமொழிக் கிணங்க. கிராமவாசிகளும் இவனுடைய பேயோட்டலையும், ரக்ஷையையும் நம்பி வந்ததால் பத்துக்கு ஒன்றாவது நரேந்தர் கூறிய வண்ணம் நடந்தது. அதை ஜனங்களும் நம்பினர். நரேந்தரும் பிடுங்கினான் பணத்தை.

இவ்விதம் பல வகையிலும் சம்பாதித்த பணத்தை நாழிக்கொருதரம் எண்ணிப் பார்ப்பான். வீட்டில் பத்திரப்படுத்தி

வைப்பின் தானில்லாத வேளையில் யாரேனும் கள்வர் கவர்ந்து சென்றால் யாது செய்வதென இடுப்பிலேயே பையில் போட்டு கட்டிக் கொண்டிருப்பான். உயிர் போகிறது என்றாலும் பிற ருக்கு ஒரு பைசாவும் கொடான். வட்டிக்கு கடன் கொடுத்தால் கடன் வாங்கினவர்கள் திருப்பிக் கொடாமற் போய் விடுவாரோ என்ற அவநம்பிக்கையால் கடனும் கொடான்.

இங்ஙன மிருக்கையில், கோதாவரியின் அக்கரைக் கிராம மொன்றில் பெரிய பிரபு ஒருவர் வீட்டில் திருமணம் நடைபெற விருந்தது. நல்ல வரும்படி கிடைக்கும். அக் கல்யாணத்தில், மேலும் நரேந்தர் தான் தலைமைப் புரோகிதர் என்றால் கேட்கவும் வேண்டுமோ, நரேந்தரின் குதூகலத்திற்கு. இன்னும் இரண்டே நாள் முகூர்த்த தினத்திற்கு. எங்கிருந்தோ நல்ல மழை பிடித்துக் கொண்டது. 'சோ' என்று மழை விடாமல் பெய்ததைப் பார்த் தால் வானம் எங்காவது பொத்துக்கொண்டு விட்டதோ என்ற ஐய முண்டாயிற்று. முன்பு எதிரிலிருந்த கிராமத்திற்கு முழங்கா லளவு ஜலத்தில் செல்லத் தக்கதா யிருந்தது கோதாவரியின் ஜலப் பிரவாகம். ஆனால் இப்போதோ வெள்ளம் இவ்வளவு அவ் வளவு என்று கூற இயலாது. படகின் உதவி யின்றி அக்கரை செல்லுதல் அசாத்தியம்.

பாவம்! நரேந்தருக்கு என்ன செய்வ தென்று தோற்றவில்லை. தெய்வ சங்கல்பம் இவ்விதம் நடந்து விட்டது. காலணாக் கூட சிலவு செய்யாமல் நதியிலே குறுக்குப் பாதையில் நடந்து சென்று விடலாம் என்று எண்ணி யிருந்தான். எண்ணத்தை, மழை பெய்து நிறைவேற வொட்டாமல் தடுத்துவிட்டது. இதற்காக படகுக்காரனுக்கு கூலி கொடுத்தாக வேண்டுமே என்று வருந்தி யது அவன் மனம் ஒருபுறம், படகுக்கு கூலி கொடுக்க சிந்தித் தால் கல்யாண வரும்படி போய்விடுமே என்றது மற்றொருபுறம். செய்வது தோன்றாது திகைத்தான் நரேந்தர். கடைசியில் படகுக் கூலி கொடுத்துத்தா னாகவேண்டும் வேறு மார்க்கமில்லை என கண்டான்.

படகு சென்று கொண்டிருந்தது. புது வெள்ளமும், கோதா வரியில் அன்னம் போன்று படகு சென்ற அழகும், இயற்கை தேவியின் வனப்பும். நரேந்தரைக் கவரவில்லை. கவியா என்ன அவன், மனதை அவைகளில் பறிகொடுக்க! கரையை யடைந்த தும் பண முடிச்சிலிருந்து பணம் எடுத்து படகுக் காரனுக்குக் கொடுக்க வேண்டுமே என்பது அவன் கவலை, கூலி கொடுக்கா திருக்க ஏதேனும் உபாயமுண்டா என சிந்திக்கலானான். சற்று நேரம் கழிந்தது அச் சிந்தனையில், மெதுவாக பேச்சு கொடுக்க ஆரம்பித்தான் படகோட்டியோடு. "எதிர்கரையிலா யிருக்கிறது உன் வீடு" என்றான் நரேந்தர்.

படகோட்டி:—ஆமாம் சாமி.

நரே:—இவ்வளவு நாளாய் உன் படகு இக்கரையில் காண வில்லையே.

ப. கோ:—எல்லாரும் தண்ணியில் நடந்தே அக்கரைக்கு போயிடுவாங்க. யாரும் படகில் வருவது கிடையாது. அதனாலே தான் நான் படகைக் கொண்டு வருவதில்லேங்க.

நரே:—இப்பொழுது படகு ஓட்டுவதால் பணம் கிடைக்கிறது. படகு ஓட்டாத காலத்தில் எப்படி ஜீவனம்?

ப. கோ:—மீன் பிடித்து பிழைக்கிறது சாமி.

நரே:—அதிலும் நல்ல வரும்படி கிடைக்குமா?

ப. கோ:—ஒண்ணும் நிலையா சொல்ல முடியாதுங்க. ஏதோ நிறைய மீன் கிடைச்சா, நல்ல வரும்படி தான். சிலநாள் ஒண்ணுமே கிடைக்காமலும் போயிடுங்க. அப்போ பட்டினிதானே யிருக்கணுங்க.

நரே:—ஐயோ பாவம்!

சிறிது நேரம் மௌனமாய் சிந்தனையி லாழ்ந்தான்.

"அக்கரையிலே நடக்குதே அந்த கண்ணாளத்துக்கா, சாமி, போறீங்க" என்றான் படகோட்டி.

நரே:—ஆமாம்.

ப. கோ:—ரொம்ப பெரிய கண்ணாளங்களாமே. உங்களுக்கு வரும்படி ரொம்ப கிடைக்கு மில்லையா, சாமி. நாங்க வந்தா சோறு போடுவாங்களா, சாமி!!

நரே:—அவ்வளவு பெரிய கல்யாணத்திலே சோறுக்குத்தானா பஞ்சம்? நிறைய போடுவாங்க. ஆமாம்; உனக்கு எழுதப் படிக்கத் தெரியுமா?

ப. கோ:—ஊஹூம். எழுதப் படிக்கத் தெரிஞ்சா நான் ஏன் சாமி, படகை ஓட்டிகிட்டு, மீனை பிடிச்சு கிட்டு, இந்த மாதிரி தொழிலுக்கு வாரேன்."

நரே:—எழுதப் படிக்கத் தெரியாதவர்களுக்கு கண் இருக்கே, அது கண் இல்லே, இரண்டு பெரிய புண்கள் என்று சொல்வது வழக்கம். அவர்கள் இந்த உலகத்தி லிருப்பது உலகத்திற்கு பெரும் பாரம்தான். எழுத்து வாசனை யில்லாததால் அவர்கள் வாழ்க்கையில் நாலிலொரு பாகம் வீணானதுபோல. அதேமாதிரி உன் வாழ்விலும் கால்பாகம் வீணாய்விட்டது. அது போகிறது. புண்ய க்ஷேத்திரங்களுக்காவது போய் ஸ்வாமி தரிசனம் செய்திருக்கிறாயா?

ப. கோ:—இல்லே சாமி. வயிறு பிழைப்பதற்கே கஷ்டப்படுற நான், எங்கே யாத்திரை அவ்வளவு தொலைவு போறதுங்க."

நரே:—அதுவும் போகிறது. என்னைப் போன்ற பிராமணர்களுக்கு தான தருமமாவது பண்ணி யிருக்கிறாயா? படகில் சத்த மில்லாமலாவது ஒரு தட்வை அக்கரை கொண்டு விட்டிருக்கிறாயா?

அப்படிக் கூறினாலாவது வாழ்வு வீணாவதையும் மறு ஜன்மத்தில் எத்தகைய இடுக்கண்களுக்கு ஆளாக வேண்டுமோ என்று

பயந்தால் அது சத்த மில்லாமல் தன்னை அக்கரை சேர்க்க மாட்டான் என்பது நரேந்தரின் எண்ணம்.

ப. கோ:—இல்லே சாமி. தான தருமம் செய்ய இந்த ஏழை கிட்டே துட்டு ஏதுங்க. படகோட்டி, வரும்படி கிடைத்தால் தானே புள்ளை குட்டிங்க பொழைக்கும்" என்றான்.

நரே:—அப்படியானால், உன்னுடைய வாழ்க்கையில் முக்கால் பாகமும் விரயமாய் விட்டது. கடவுள் கொடுத்த, கிடைத்தற்கரிய மானிட வாழ்க்கையில் என்போலுள்ள பிராமணர்களுக்கு தான தருமம் செய்யாததால் முக்கால் பாகம் கெட்டழிந்து விட்டது—என்றான்.

படகோட்டி ஒன்றும் பதில் சொல்லவில்லை.

இதற்குள் படகு நதியின் நடுவில் வந்துற்றது. முன் பிருந்ததைவிட பிரவாகம் மிகவும் அதிகமாய் விட்டது. அதோடு காற்றும் கடுமையாக அடிக்க ஆரம்பித்து விட்டது. வெள்ளமோ நிமிஷத்திற்கு நிமிஷம் அதிகரித்தது. இன்னும் பாதிதூரம் சென்றாக வேண்டும். ஓட்டக்காரனால் சமாளிக்க இயலவில்லை. காற்றின் வேகம் படகின் ஓட்டத்தை தடுத்தது. படகினுள் ஜலம் புக ஆரம்பித்தது. படகு முழுகவும் தொடங்கியது.

"சாமி, உங்களுக்கு நீஞ்ச தெரியுமாங்க. படகு இனிமே தாங்காது. மூழ்கி விடும்போலிருக்கிறது" என்றான் படகோட்டி.

"ஐயோ, எனக்கு நீஞ்சத் தெரியாதே. என்ன செய்வது" என்று பதறினான் நரேந்தர்.

"நீஞ்ச தெரியாமே போனா வேறே வழியில்லேங்க. பிராமணனுக்கு தான தருமம் செய்யாததினாலேயும், படிக்க தெரியாததினாலேயும் என்னுடைய வாழ்க்கையில் முக்கால் பாகம் வீணாய் போயிடிச்சுனீங்க; உங்களுக்கு நீஞ்ச தெரியாததினாலே நீங்க எவ்வளவு படிச்சு, தான தருமம் செய்திருந்த போதிலும், உங்களுடைய முழு வாழ்க்கையும் வீணாய் முழுகப் போவதுங்க" என்றான் படகோட்டி.

இதற்குள் படகு மூழ்க ஆரம்பித்து விட்டது. அநேகமாக எல்லா பாகமும் அமிழ்ந்து விட்டது. படகிலிருந்து குதித்தான் படகோட்டி, நீந்தி கரை சேர்ந்து விட்டான்.

பாவம்! பேராசை நரேந்தர் இடுப்பில் பணமுடிப்புடன் நீந்தத் தெரியாததால் கோதாவரியில் மூழ்கி மடிந்தான்.

ஏழைக் கிராமவாசிகளை, ஏமாற்றி, அநியாயமாய் அக்கிரமமாய், நரேந்தர் கொள்ளை யடித்தது கடவுளுக்கே பொறுக்கவில்லை. எவ்வளவு நாட்கள் தான் சகிக்க முடியும்?

'அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்' என்பது உண்மை யாயிற்று.

# மூல காரணம்

(லியோ டால்ஸ்டாய்)



அங்கம். 2.

[அதே குடிசை. காலைநேரம். மார்த்தாவும் அகூலினாவும். மைக்கேல் தூங்கிக் கொண்டு இருக்கிறான்.]

மார்:—[கைக்கோடரியை எடுத்துக் கொண்டு] நான் போய் விறகு தறிக்க வேண்டும்.

அகூ:—[ஒரு வாளியை வைத்துக் கொண்டு] அந்தப் பிரயாணி இல்லாவிட்டால் நேற்று உன்னை அவன் நைய நொறுங்க அடித்திருப்பான். அவனைக் காணவில்லையே? போய் விட்டானோ? அப்படித்தான் நினைக்கிறேன். [ஒருவருக்குப் பின் ஒருவராக வெளியே செல்கிறார்கள்]

மைக்:—[* அடுப்பின் உச்சியிலிருந்து கீழே இறங்குகிறான்.] அட, பொழுது புறப்பட்டு சூரியன் எவ்வளவு உயரத்தில் வந்து விட்டான். [ஜோடுகளை அணிந்து கொள்ளுகிறான்.] அம்மாவோ அவள் தண்ணீர் எடுக்கத்தான் போயிருக்கவேண்டும். என் தலை என்ன இப்படி வலிக்கிறது! இனிமேல் அதைத் தொடமாட்டேன்; பிசாசுதான் அதைச் சாப்பிட வேண்டும்! [ஏசுநாதர் சிலைக்கு முன்னால் வந்து தொழுது விட்டுப் போய் கைகளையும் முகத்தையும் கழுவிக் கொள்ளுகிறான்.] இதோ போகிறேன்.

[மார்த்தா விறகோடு வருகிறாள்.]

மார்:—நேற்று வந்த பிச்சைக்காரன் போய்விட்டானா?

மைக்:—போயிருப்பான். அவனை நாம் பார்க்கமுடியுமா?

மார்:—போகட்டும்; போகட்டும். ஏதோ ஒரு அறிவு நிறைந்த மனுஷன்.

மைக்:—அவன் உனக்குப் பரிந்து பேசினான்!

மார்:—உம். அதைப்பற்றி என்ன!

[மைக்கேல் கோட் அணிந்து கொள்ளுகிறான்.]

மார்:—சரிதானே, இராத்திரி, நீங்கள் தேயிலையையும் சர்க்கரையையும் பத்திரப் படுத்தி வைத்தீர்களா?

மைக்:—நீ அல்லவா அதைச் செய்திருப்பாய் என்று நினைத்தேன்.

---

* அடுப்பு என்பது, ரஷியாவில் செங்கல்லால் கட்டப்பட்ட பெரிய ரொட்டி சுடும் அடுப்பு. அதன் மேல் பரப்பு, ஒன்றுக்கு மேற்பட்ட மனிதர்கள் படுத்துக்கொள்ளும் அளவிற்குத் தட்டையாக இருக்கும்.

[அகூலினு வாளியில் ஜலம் எடுத்துக் கொண்டு வருகிறுள்.]

மார்:—[அகூலினுவைப் பார்த்து] மாமி! பொட்டலத்தை நீங்கள் எடுத்து வைத்தீர்களா?

அகூ:—இல்லையே, எனக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரியாது. நான் அதைப் பார்க்கவே இல்லை.

மார்:—இராத்திரி அதை ஜன்னலில் கொண்டு போய் வைத்தேன்.

அகூ:—ஆமாம். நானும் அங்கே அதைப் பார்த்தேன்.

மார்:—வேறு எங்கே இருக்கும்? [அதைத் தேடுகிறுர்கள்.]

அகூ:—அட பாவமே! என்ன வெட்கக் கேடு!

[பக்கத்து வீட்டுக்காரன் வருகிறுன்.]

பக்:—மைக்கேல்! விறகு வெட்டிக் கொண்டு வரப் போவோமா?

மைக்:—உம். சரி. நானும் அதற்குத்தான் தயார் செய்து கொண்டிருந்தேன். ஆனுல் நாங்கள் ஒரு சாமானைத் தொலைத்து விட்டோம், பார்த்தாயா?

பக்:—என்ன அது?

மார்:—எங்கள் வீட்டுக்காரர் நேற்றுப் பட்டணத்தி லிருந்து ஒரு பொட்டலத்தில் தேயிலையும் சர்க்கரையும் வாங்கிக் கொண்டு வந்திருந்தார். நான் அதை வாங்கி இங்கே ஜன்னலில் தான் வைத்தேன். அதை எடுத்துப் பத்திரப்படுத்த மறந்து போனேன்; இப்பொழுது அதைக் காணும்.

மைக்:—அதற்கு இங்கே இராத்திரி தங்கியிருந்த பிரயாணியை சந்தேகப் படுவது பாவம் இல்லையா?

பக்:—அவன் எப்படிப்பட்டவன்?

மார்:—கொஞ்சம் ஒல்லியாக இருப்பான். தாடி கிடையாது.

மைக்:—அவனுடைய கோட் கந்தலாக இருக்கும்.

பக்:—சுருட்டை மயிரும் வளைந்த மூக்குமாக?

மைக்:—ஆம், ஆம்!

பக்:—இப்போது தான் அவனைப் பார்த்தேன். அதுதானே. அவ்வளவு வேகமாக ஏன் நடந்து போகிறுன் என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

மைக்:—அது அவனுக்குத்தான் இருக்க வேண்டும். அவன் எந்தப் பக்கம் போகிறுன்?

பக்:—இன்னும் பாலத்தைக் கடந்திருக்க மாட்டான் என்று நினைக்கிறேன்.

மைக்:—[குல்லாயைத் தலையில் எடுத்து வைத்துக் கொண்டு வேகமாகப் போகிறான். பக்கத்து வீட்டுக்காரன் பின்னால் செல்லுகிறான்.] அந்தத் திருட்டுப் பயலைப் பிடித்துக் கொண்டு வருகிறேன்.

மார்:—என்ன வெட்கக் கேடு! நிச்சயமாய் அந்தப் பயல்தான்.

அகூ:—அவன் இல்லாவிட்டால்? இப்படித்தான் ஒரு தட்வை, சுமார் இருபது வருஷங்களுக்கு முன்னால் ஒரு மனிதனை அவன் ஒரு குதிரையைத் திருடினான் என்று குற்றம் சாட்டினார்கள். உடனே ஒரு கூட்டம் கூடியது. ஒருவன், 'அவன் குதிரையைப் பிடிக்கும்போது நான் கண்ணாரப் பார்த்தேன்' என்று சொன்னான். இன்னொருவன் அதை அவன் ஓட்டிக் கொண்டு போகும்போது பார்த்ததாகச் சொன்னான். பல நிறமுள்ள ஒரு பெரிய குதிரை அது. அதை இலேசாகக் கண்டு பிடித்து விடலாம். அப்புறம் எல்லா ஜனங்களும் அதைத் தேட ஆரம்பித்தார்கள். அப்போது அந்த வாலிபனைக் காட்டிலே கண்டார்கள். 'நீ தான் அதைத் திருடியது' என்று அவனைப் பார்த்து எல்லோரும் சொன்னார்கள். அவன் இல்லை என்று மறுத்து சத்தியம்கூட செய்தான். அவர்களோ, 'இவனைக் கேட்டு என்ன பிரயோஜனம்? இவன்தான் திருடியது என்று பெண்களெல்லாம் உறுதியாகச் சொன்னார்களே' என்று சொன்னதும், அவன் முரட்டுத்தனமாக ஏதோ சொன்னான். ஜார்ஜ் லாபுஷ்கின் [இப்போது அவன் செத்துப்போய் விட்டான்] துடிதுடிப்புள்ளவன். அவனைப் பலமாகத் தாக்கி அடித்து விட்டான். "நீதான் திருடியது" என்று சொல்லிக் கொண்டே அடித்தான். பிறகு எல்லோரும் அவன்மேல் விழுந்து கம்பாலும் கையாலும் அவன் சாகுமட்டும் அடித்தார்கள். நீ என்ன நினைக்கிறாய்?......மறுநாள், நிஜமான திருடன் அகப்பட்டான். அவர்கள் அடித்துக் கொன்ற வாலிபன் வெட்டுவதற்கு ஒரு நல்ல மரம் பார்ப்பதற்காகக் காட்டுக்குச் சென்றவன் தானாம்.

மார்:—ஆமாம். அதுவும் நியாயம் தான். அவன் ரொம்பக் கேவலமான ஸ்திதியில் இருந்தான். நல்லவனுக்கு காணப் பட்டான்.

அகூ:—ஆமாம். ரொம்பச் சாதாரணமான மனுஷன். அவனைப் போன்றவர்களிடத்தில் விசேஷமாக ஒன்றையும் எதிர்பார்க்க முடியாது.

மார்:—அதோ சத்தம் கேட்கிறதே—அவனைக் கொண்டு வருகிறார்கள் என்று நினைக்கிறேன்.

[மைக்கேல், பக்கத்து வீட்டுக்காரன், ஒரு கிழவன்: ஒரு வாலிபன் எல்லோரும் பிரயாணியைத் தள்ளிக் கொண்டு வருகிறார்கள்.]

மைக்:—[கையில் பொக்கிலத்தை வைத்துக் கொண்டு, ஆத்திரத்துடன் தன் மனைவியைப் பார்த்து] இவனிடத்தில் தான்

இது இருந்தது. [பிரயர்ணியைப் பார்த்து] திருட்டுப் பயலே! நாயே!

அகூ:—[மார்த்தாவைப் பார்த்து] அவன் தான், பாவம். பார். எப்படித் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு இருக்கிறான் என்று.

மார்:—கொஞ்சம் குடித்து விட்டால் கைக்குக் கிடைத்தை எல்லாம் அமுக்கிக் கொள்வார்கள் என்று அவன் தான் நேற்று சொன்னான்.

பிர:—நான் திருடன் அல்ல, நான் பிறர் உடைமையைப் பறிப்பவன்தான். நான் ஒரு தொழிலாளி. நான் வாழ வேண்டும். தெரிகிறதா? நீங்கள் என்னை என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள்.

பக்:—அவனைக் கிராம முனிசிப்பிடத்திலாவது, போலீஸ் ஸ்டேஷனுக்காவது நேராகக் கொண்டு செல்லுங்கள்

பிர:—நீங்கள் இஷ்டப்பட்டதைச் செய்யுங்கள் என்று நான் சொல்லிவிட்டேனே. எனக்குப் பயமே கிடையாது. எந்தத் தண்டனையையும் ஏற்றுக் கொள்ளத் தயாராய் இருக்கிறேன். உங்களுக்குக் கல்வியறிவு இருந்திருந்தால் நான் சொன்னதைப் புரிந்திருப்பீர்கள்.

மார்:—[தன் கணவனைப் பார்த்து] கடவுளுக்குப் பொதுவாக அவனை விட்டு விடுவோம். நமக்கோ பொட்டலம் திரும்பக் கிடைத்து விட்டது. அவன் போகட்டும். நாம் அந்தப் பாவத்தைக் கட்டிக் கொள்ள வேண்டாம்.

மைக்:—[மாறி மாறிச் சொல்லுகிறான்] பாவமா! உபதேசம் செய்ய ஆரம்பித்து விட்டாயோ? உன் யோசனையில்லாமல் எங்களுக்கு நடக்கத் தெரியும். ஹே!

மார்:—அவனை ஏன் விட்டுவிடக் கூடாது?

மைக்:—அவனை விடவா! முட்டாள்! உன் யோசனையைக் கேட்காமல் எங்களுக்கு நடந்து கொள்ளத் தெரியும். விட்டு விடவா! அவன் வேண்டுமானால் போகட்டும். ஆனால் அவனுக்கு, மனதில் படும்படியாக இரண்டொரு வார்த்தைகள் சொல்ல வேண்டும். [பிரயர்ணியைப் பார்த்து] ஏய்! நான் என்ன சொல்லுகிறேன் என்று கேள். நீ மிகவும் ஏழ்மை நிலையில் இருந்த போதிலும் பெரும் தப்பிதம் செய்துவிட்டாய்—பெரும் தப்பிதம். வேறொரு மனுஷனாயிருந்தால் உன் விலா எலும்பை முறித்து போலீஸில் கொண்டு போய் ஒப்படைத்திருப்பான். நானாக இருக்கப் போய் இந்த வார்த்தையைமட்டும் சொல்லுகிறேன். நீ தப்பிதம் செய்து விட்டாய், பெரும் தப்பிதம். நீ ரொம்பக் கெட்ட வழியில் பிரவேசித்திருக்கிறாய். உன்னை நான் அடித்துத் தொந்தரவு செய்ய

விரும்பவில்லை. [பேச்சை நிறுத்துகிறான். எல்லோரும் மௌன மாய் இருக்கிறார்கள். மிகவும் சாந்தமாகத் திரும்பவும் பேசு கிறான்] போ, போ. கடவுள் உன் பக்கம் இருந்து துணை செய்யட் டும், திரும்பவும் இப்படிச் செய்யாதே! [தன் மனைவியைப் பார்த்து] எனக்கு நீ உபதேசம் செய்யலாம் என்று நினைத்தாயோ?

பக்:—நீ அப்படிச் செய்யக் கூடாது, மைக்கேல். நீ அப்படிச் செய்யக் கூடாது. அது, நீ இப்படிப்பட்ட வேலைக்கு ஊக்கமூட்டு கிறாய் என்று அர்த்தமாகும்.

மைக்:—[கையில் பொட்டலத்தோடு] நான் சரியாக நடக்கி றேனோ இல்லையோ! [தன் மனைவியைப் பார்த்து] நீ யென்ன உப தேசம் செய்கிறது! [நின்று, பொட்டலத்தைப் பார்க்கிறான். பிறகு தன் மனைவியைப் பார்க்கிறான். பிரயாணியிடம் அந்தப் பொட்டலத்தைக் கொடுத்து விடுகிறான்] எடுத்துக்கொள். போகிற வழியில் நீ டீ போட்டுச் சாப்பிட்டுக் கொள்ளலாம். [மனை வியைப் பார்த்து] நீ எனக்கு உபதேசம் செய்யலாம் என்று நினைத்தாயாக்கும்? [பிரயாணியைப் பார்த்து] போ. போவதற்கு உனக்கு உத்தரவு கொடுத்தாகி விட்டது. விளையாட்டில்லை, நீ போகலாம்.

பிர:—[பொட்டலத்தை எடுக்கிறான். மௌனம்] எனக்கு ஒன் றும் தெரியாது என்று நீங்கள் நினைக்கிறீர்கள். [அவன் குரல் தழுதழுக்கிறது] எனக்கு எல்லாம் நன்றாகத் தெரியும். நாயை அடிக்கிறமாதிரி என்னை நீங்கள் அடித்திருந்தாலும் எனக்கு அவ்வளவு கஷ்டமாக இருந்திருக்காது. நான் எப்படிப் பட்டவன் என்று எனக்குத் தெரியும். நான் ஒரு அயோக்கியன், கெட் டழிந்தவன், தெரிகிறதா? என்னை மன்னித்து விடுங்கள். [ஏங்கு கிறான். பொட்டலத்தை மேஜைமீது எறிந்துவிட்டு வெளியே வேகமாகப் போகிறான்.]

மா:—நல்ல வேளை—அவன் தேயிலையை எடுத்துக் கொள்ள வில்லை. இல்லாவிட்டால் நமக்கு டீ போட ஒன்றுமில்லாமல் போயிருக்கும்.

மைக்:—[மனைவியைப் பார்த்து] நீ எனக்கு உபதேசம் செய்ய லாம் என்று நினைத்தாயோ?

பக்:—அவன் எப்படி அழுதான், பாவம்! ஏழைப் பயல்.

அகூ:—அவனும் ஒரு மனிதன் தான்.

முற்றும்.

---

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)



### அன்றே யாம் கண்டது!

யுரேனஸ்—நெப்டியூன்—ப்ளூட்டோ என வரும் இக் நூதனக் கோள்கள் மூன்றும் சமீபத்தில்—அதாவது கடந்த மூன்று நூற்றாண்டுகளுள் ஒன்றன்பின் ஒன்றாக மேலைப்புலவர்கள் தங்கள் ஆராய்ச்சியில் கண்டு சொல்லப்பட்டவை. இற்றைக்குப் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே இந்திய வானநூலார் கண்டவை தாம் இவைகள் என்று தெரிகிறது. புண்ணிய இந்தியாவில் மிகப் பழைய காலத்திலேயே இருந்த நம் முந்தையோர்களால், எல்லை கோல முடியாத பரந்த வானவெளியையும்-அதில் இடம் பெறும் பலவற்றையும்-அவற்றின் இயக்கங்களையும்-அவ் இயக்கங்களின் தத்துவ இரகஸ்யங்களையும் மிகவும் தெளிவாகக் கண்டு வைத்திருக்கின்றனர். அண்ட வானத்தின் இரகஸ்யங்களைக் கண்டவாறே அவர்களுடைய சந்ததி வர்க்கங்களுக்காகப் பதிவு செய்துவைக்கவும் அவர்கள் தவறவில்லை.

சரித்திர காலமான கடந்த சில நூற்றாண்டுகளாகத்தான்—அதிக பக்ஷம் மூவாயிரம் ஆண்டுகளாகத்தான் மேலைநாட்டு ஆதாரங்கள் கிடைக்கத் தக்கவை. அதற்கு முன்னுள்ளன அனைத்தும் ஊகத்தில் திரட்டியவையே. நம் முந்தையோர் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் கண்டனவற்றுள் ஏகதேசமே சிறிது சிறிதாக விஞ்ஞான அபிவிருத்தியின் போக்கில் கிடைத்து வரும் சாதனங்களால் இப்பொழுது கண்டு வருகிறார்கள்-மேலை நாட்டினர்.

### தலமெங்கும் சூரிய குடும்பக் காட்சி

இயற்றமுற் கோளம் சூரியன். அதை நடுவாக்கிச் சுற்றி ஓடும் கோள்கள் பல. அவை அனைத்தும் சூர்ய குடும்பத்தைச் சார்ந்தவை. அதாவது அவை யாவும் சூர்யனுடைய ஆதிக்கத்திற் குட்பட்டவை. கோள் இனத்து வருமவற்றுள் முக்கியமானவை ஒன்பது. இவ் ஒன்பதின் சுற்று வீதிகளையே தலமெங்குமுள்ள கோயில்களின் சுற்றுப் பிரகாரங்களும்—வீதிகளும் குறிக்கின்றன. தலங்களில் ஸ்ரீரங்கம்-சூர்ய நாயனார் கோயில் இவை யிரண்டிலும் மூலஸ்தான மூர்த்தியைச் சுற்றி ஏழு பிரகாரங்களும்-மூன்று வீதிகளும் உள்ளன. இவை பத்தும் முன்னம் செவ்வாய்க்கும்-வியாழனுக்கும் நடுவே ஒரு வடிவா யிருந்து பின்னர் பலவாய்ச் சிதறிவிட்ட கோளின் வீதியையும் சேர்த்துக் குறிக்கின்றது. ஆகம வீதிகளில் நிருமிக்கப்பட்ட இக் கோயில்களின் அமைப்புக்கள் வானில் ஆகாய மதில்களுக்கிடை சூர்யனைச் சுற்றி

ஓடும் கோள்களின் சுற்று வீதிகளாய், சூர்ய குடும்பத்தைப் பிரதக்ஷி மாக்குகின்றன.

## கோள்களும்—அவற்றின் வகுப்புகளும்

கோள் ஒன்பதும் மால்-புதன் (Mercury), சுக்ரன்-வெள்ளி (Venus), நிலம்-பூமி (Earth), அங்காரகன்-செவ்வாய் (Mars), குரு-வியாழன் (Jupiter), காரி-சனி (Saturn), ஊரன் - நிருதி (Uranus), வண்ணன் - வருணன் (Neptune), பலன் - குபேரன் (Pluto) என வருவனவாகும். இந்த வரிசையில் சூரியனிலிருந்து ஒன்றுக்கு அப்பால் ஒன்ருக அவை இடங் கொண்டுள்ளன.

கோள்கள் பொதுவில் ஆராய்ச்சித்துறையில் மூன்று இனங்களாக வகுக்கப்படுகின்றன. உள்நிலை நில இயற்கோள்கள் (Inner or-Terrestrial Planets), இடைநிலைக் கோள்கள், வெளிநிலை-அல்லது வான இயற்கோள்கள் (Cuter or Celestial Planets) ஆகிய மூன்று வகையே அவ் இனங்கள். இவற்றுள் முதல் இனமாகிய உள் நிலை—அல்லது நில இயற்கோள்கள் சூர்யனுக்கு அருகிலும், மூன்ருவது இனமாகிய வெளிநிலை-அல்லது வான இயற்கோள் கள் சூர்யனுக்கு வெகு தூரத்திலும் உள்ளன. இவை இரண்டு இனங்களையும் பிரித்து அறியுமாறு உதவுவதுபோல இடைநிலைக் கோள்கள் இவைகளுக்கு மத்தியில் இடம் பெற்றிருக்கின்றன.

நில இயற்கோள்கள் என்பன புதன்-சுக்ரன்-பூமி-செவ்வாய் ஆகிய நான்கும் ஆகும். வான இயற்கோள்கள் வியாழன் சனி-நிருதி-வருணன்-குபேரன் ஆகிய ஐந்தும் ஆகும். நில இயற்கோள்களில் இறுதியான செவ்வாய்க்கும்-வான இயற்கோள்களில் முதலாவதான வியாழனுக்கும் நடுவே இடைநிலைக் கோள்கள் என்பவை பல் ஆயிரக்கணக்கில் சிறு சிறு கோளத் திரள்களாக சுழன்று கொண்டிருக்கின்றன. முன்னம் பெருங்கோளாக விருந்து, ஒன்ருன அது பின்னர் பலவாகச் சிதறியவை என்று அவற்றைக் கருதுகின்றனர். இதே பொருளில் 'Astercids' cr 'Planetoids' என்று இச் சிறு கோளத் திரள்கள் வழங்கப்படுகின்றன. இவற்றுள் முப்பது கோள்களைப்பற்றி இதுவரை அறிந்திருக்கின்றனர். இவைகளைப்பற்றிய விவரங்கள் இங்கு முக்கியமில்லை.

இந்த இடை நிலைக்கோளின் சுற்று விதியைக் குறிக்கும் ஒன்று சேர, ஆகமவழி சமைக்கப்பட்ட திருக்கோயில்களைச் சுற்றியுள்ள பிரகாரங்கள் ஏழும்—வீதிகள் மூன்றும் சேர்ந்த வட்டங்கள் பத்தும் பூர்த்தியாகிறது. இதனுல், நம் முந்தையோர்கள் செவ்வாய்க்கும்—வியாழனுக்கும் நடுவேயுள்ள இந்த இடை நிலைக்கோளை முன்னமேயே அறிந்திருக்கின்றனர் என்பது நிதர்ஸனமாகின்றது.

---

## திருத்தம்

சென்ற இதழில் வெளி வந்த ஜீவிய சந்தாதாரரின் விலாசத்தை ஸ்ரீ. சி. லோகநாதன், வீமக்கவுண்டன் பாளையம், உழவர்கரைக் கொம்யூன், புதுவை என்று திருத்தி வாசித்துக் கொள்ளவும்.

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப் - சு. மீ. கணபதி)



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

இணறு வெட்ட பூதம் புறப்பட்டது என்று நினைத்தான் வாசு. நாம் தமாஷ் செய்தால் கிழவி உண்மையென நினைத்து வந்து விட்டாளே என்று வருந்தி, "உங்கள் பேச்சுக்கு மறு பேச்சில்லே. நீங்கள் சொல்வதால் நான் தங்குகிறேன். என்னடா சோமு சிரிக்கிருய். நமது தர்க்கங்கள் எல்லாம் பெண்கள் முன்பு செல்லாது. என் வேலே கெட்டுப் போய் விட்டது. நன்ருகச் சிரி. என்ன சுந்திரா, திருப்திதானே. இனிமேல் கயிறு கொண்டு கட்டச் சொல்லமாட்டாயே உன் அண்ணனே. காலே வேளேயில் நல்ல நாடகம்" என்ருன். சுந்திராவும் அவள் தாயும் சிரித்துக் கொண்டே உட்சென்றனர்.

"வாடா சோமு. இப்படியே கடை வீதி சென்று ஏதாவது பரிசு வாங்கி வருவோம்; எழுந்திருடா" என்ருன் வாசு. "சுத்த மண்டு. முதலில் வயிற் றுப்பாட்டைப் பார்த்துக்கொண்டல்லவா மற்ற தெல்லாம்" என்று கூறி காலே ஆகாரத்திற்கு அழைத்துச் சென்ருன். முடிந்ததும் சோமுவைத் தன் அறைக்கு அழைத்துச் சென்று, "நல்ல காலம். நேற்று பாங்கியிலிருந்து நிறையப் பணம் ஊர் போவதற்காகவும், மற்ற செலவு ஏதாவது ஏற்பட்டா லும் இருக்கட்டும் என்றும் பத்மாசனிக்காக வாங்கினேன். அவர்களுக்கு மொத்தம் நூற்று முப்பத்தைந்து ரூபாய்கள் செலவு செய்தது கொடுத்தது எல்லாம் சேர்ந்து" என்று சொல்லி அதன் பின்பு கடைவீதி சென்றனர்.

காசிப் பட்டுப்புடவை ஒன்று, சில்க் புடவை ஒன்று, மற்ற சில் லரைச் சாமான்கள் முதலியவை நூற்றுப்பத்து ரூபாய்களில் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தான். விருந்து சாப்பாடும் முடிந்தது. தனக்குப் பரிசளிக்கப்பட்ட சில்க் புடவையைக் கட்டிக்கொண்டு வாசுவும், சோமு வும் இருந்த அறையில் வந்து அமர்ந்தாள் சுந்திரா.

"சுந்திரா, உன்னே அழைத்துப்போய் உன் இஷ்டமான சாமான்களே வாங்கிப் பரிசளிக்க நினைத்தேன். காலேயிலிருந்து நீ நடந்து கொண்ட மாதிரியில் உன்னே அழைக்க பயந்து பேசாம லிருந்துவிட்டேன். இந்த சாமான்கள் மனதுக்குப் பிடிக்கிறதா ? திருப்திதானே" என்ருன் வாசு.

"மனசுக்குப் பிடிக்கிறதோ இல்லேயோ தெரியவில்லே. உடலுக்குப் பிடித்திருக்கிறது என்று தெரிகிறது. ஏனென்ருல் இந்தப் புடவை என் உடலிலிருக்கிறபடியால்தான். மனதுக்குப் பிடிக்கும் சாமான் கொண்டு வரவில்லே என்றுதான் நினைக்கிறேன். எனக்குத் திருப்திதான். ஒரு விஷ யத்தில் மட்டில் குறை. அது இவ்வளவு பணம்செலவு செய்திருக்க வேண் டியதில்லே என்பதுதான்."

"பணச் செலவு. நன்ருக இந்த வார்த்தை இவர்களிடம் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறது. உன் மனதுக்குப் பிடித்தது வஸ்து என எண்ண வில்லே. மனிதனுகத்தா னிருக்கவேண்டும். அவனும் கூடிய சீக்கிரம் வரு வதற்கு நானும் சோமுவும் முயற்சிக்கிறோம்" என்ருன் வாசு. சுந்திரா

காரணத்தினால் தலைகுனிந்தாள். அதன் பின்னர் பல விஷயங்களைப்பற்றி யும் பேசிக்கொண்டிருந்தனர். பின்னர் சோமு வாசுவின் பயணத்தைப் பேசினான். அவனுக்கு அங்கு நடந்துகொள்ள வேண்டியதைப்பற்றிப் போதித் தான். மௌனமாக எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தனர். வாசு வும், சுந்திராவும். மறுதினம் காலை வாசு தன் தகப்பனாரை அழைத்து வரச் செல்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப் புறப்பட்டான்.

———o———

## எட்டாவது அதிகாரம்

### எதிர்பாராதது

குழந்தை இருக்குமிடத்திற்கு வெறுங்கையுடன் செல்லக் கூடாது என்ப தாகக் கூறுகின்றனர். அப்படி எதற்காகச் சொல்லினும் சரி, சகோதரி யைப் பார்க்கச் சென்றால் அவசியமாக ஏதாவது வாங்கிப் போகத்தான் வேண்டும். இல்லையென்றால் அவர்கள் வருந்துகின்றனர். எல்லா ஸ்திரீ களும் ஒவ்வொருவருக்காவது சகோதரி என்ற முறை இருக்கிறது. அவர் கள் பெரும்பாலும் விரும்புவது வாசனைத் திரவியங்கள், புஷ்பம், மஞ்சள், பாத்திரங்கள் இவைகள்தான். இதனை மாத்திரம் வாங்கிச் செல்லும் வழக்க முடையவர்கள் இல்லாமலில்லை. ஆனால் ஒவ்வொரு தடவையிலும் இது போன்று கொண்டு போதல் பொருத்தமல்ல. வித விதமான சாமான்களா யிருத்தல் வேண்டும். அதற்கெங்கே போவது? தவிரவும் சிறிது உயர்ந்த அந்தஸ்தி லிருந்தால் அதற்கேற்ற பொருள்களையே விரும்புகின்றனர். சென்றதடவை கமலாவைப் பார்க்கச் சென்றபொழுது பழங்கள் மட்டிலும் தான் வாசு வாங்கிக் கொண்டு சென்றிருந்தான். தற்சமயம் செல்ல நினைத்த போது கமலா கூறியது கவனம் வந்தது. தனக்கென ஒன்றும் வாங்கி வர வில்லை என்று குறிப்புடன் தெரிவித்து, பாலனுக்கு புதுமாதிரி சாமான்களா யிருந்தால் அனுப்பிவை என்றாளல்லவா! அந்த கவனம் ஏற்படவும் வாசு முற் கூறியிருக்கிறபடி சிந்தித்தான். பலநேரம் சிந்தித்தும் புடவை தவிர வேறு ஒன்றும் அவனுக்குத் தெரியவில்லை. முன்பின் வாங்கிப் பழகியிருந்தால் தானே தெரியும்.

பத்மாசனி தன் பெண் கலியாணத்திற்குக் கொடுக்கிறேன் என்றதை உடனே கொடு என்று கேட்டால் கொடுக்கும் பொருட்டு ஐந்நூறு ரூபாய் களை பாங்கியிலிருந்து வாங்கி யிருந்தான். அப்பணத்தைக் கொண்டு கடை யில் விலை உயர்ந்த புடவை ஒன்றை வாங்கிச் செல்ல முடிவு செய்து கடைக் குச் சென்றான். அவன் மலைபோன்று தன் முன்பு விழுந்த புடவைகளைப் புரட்டிப் பார்த்து கடைசியாக ஒன்றை எடுத்து வைத்துக் கொண்டான். அதற்கேற்ற ஜாக்கெட் என்று கூறி கடைக்காரன் கொடுத்ததையும் வாங்கிக் கொண்டான். பாலனுக்கும் சில துணிகள் வாங்கிக் கொண்டு கடையை விட்டு வெளியே வந்தான். விளையாட்டுச் சாமான்கள் விற்கும் கடையில் பத்து ரூபாய்களுக்கு வாங்கினான். பலரக செண்டுகள் பதினைந்து ரூபாய்க ளுக்கு வாங்கிக் கொண்டு இவைகளை வைத்துச் செல்வதற்கு ஒரு தோல் பெட்டி பத்து ரூபாயில் வாங்கிய பின்பு கையில் மீதமென்ன இருக்கிறது என்று பார்த்தான். ஐம்பது ரூபாய்களே இருந்தன. அதில் ஐந்து ரூபாய்களுக்குப் பழங்களையும் வாங்கிக் கொண்டான். அப்பொழுது தான் மாப்பிள்ளைக்கு ஒன்றும் வாங்கவில்லைஎன்ற கவனம் வந்தது. அன்று

விடுமுறை நாள். பாங்கி கிடையாது. இருந்தாலும் எதை வாங்கிப் போவது? அவர் கொண்டு போவதைப் பெற்றுக்கொள்ள மறுத்து விட்டால் அவ மானம் என்று நினைத்து சமாதான மடைந்தான். வாசுவையும், அவன் மூட்டையையும் ரயில் கமலாவின் இருப்பிடம் கொண்டு சேர்த்தது. வண்டி பிடித்துக் கொண்டு தன் சகோதரியிருக்கும் பங்களா அடைந்தான். தன் பெயர் விலாச மெழுதித் தயாராக வைத்திருந்த சீட்டை வெளியிருந்த சேவ களைக் கூப்பிட்டு வண்டியி லிருந்தபடியே கொடுத்தான்.

"ஐயா, ஊரிலில்லை. நாளை மறுநாள் வந்தால் பார்க்கலாம்" என்றான் அவன்.

"ஐயாவைப் பார்க்கவேண்டிய அவசியமில்லை.எஜமானியிடம் கொண்டு போய்க் கொடுத்து பதில் தெரிந்துவா" என்றான் வாசு.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் தன் தகப்பனாரும், கமலாவும் ஆனந் தத்துடன் எதிரில் வருவதைக் கண்டான். கமலா முந்திக் கொண்டாள். "எப்பொழுது வந்தாய்? நீ கூட சீட்டு அனுப்பியா வருவது? வண்டியில் என்ன! கீழே இறங்கேன்" என்று கூறி அவன் கையைப் பிடித்து இறக்கி விட்டாள். வாசு ஒன்றும் தோன்றாமல், வண்டியிருந்த சாமான்களைக்கூடக் கவனிக்காமல் அவளைத் தொடர்ந்தான். தன் தகப்பனாரை மாத்திரம் குழ றிக் கொண்டே உடல் நலத்தைப் பற்றி விசாரித்தான். எல்லோரும் சென்று அமர்ந்தனர். வேலைக்காரனும் வண்டிக்காரனும் தலைக்கொன்றாகப் பெட்டி யையும், பழக் கூடையையும் கொண்டுவந்து வைத்தனர். வண்டிக்கார னிடம் சந்தோஷத்தில் ஒரு ரூபாயைத் தூக்கி எறிந்தான்.

தான் அவர்களுக்குச் சமமாக இல்லாத போதிலும், அவர்கள் போன்று தன்னாலும் செலவு செய்ய முடியும் என அவர்கள் அறிய வேண்டுமென்று உடையை மாற்றி, முன்னம் கூறிய சாமான்களையும் வாசு வாங்கி வந்தான். இது தான் கமலாவின் வீடு செல்வது அநேகமாக கடைசி முறையாக இருக்கலா மெனவும் எண்ணி வந்தான். ஆயினும் இந்த மாதிரி கமலா வரவேற்பாள் என்று அவன் எதிர் பார்க்கவேயில்லை. ஒரே வாரத்தில் இத்தகைய மாறுதல். எப்படி நேர்ந்தது என்ற சிந்தனை கொண் டான். அவன் மனம் ஆனந்த மயமாக இருந்தது.

"உடம்பு சௌக்யமாயிருக்கிறதா? வருமுன்பு கடிதம் எழுதியிருக்க லாம். அவரும் காம்ப் போயிருக்கிறார், அப்பாவின் உடம்பு தேறிவிட்டது. புதுப்பெட்டி ஒன்று வாங்கி வந்திருக்கிறாயே. அதில் என்ன இருக்கிறது?" என்று கேட்டாள் கமலா.

"அப்பா, சிறிது இளைத்துப் போனது போலிருக்கிறாய். கவலைப் பட்டுக் கொண்டிருந்தாயா? கமலத்தின் மனம் நீ சென்றதும் மாறி அவள் புனர் ஜன்மம் எடுத்து விட்டாள், மாப்பிள்ளையும் அப்படியே; நான் இப்பொழுது நித்தியானந்தத்தி லிருக்கிறேன். ஒரு குறைவுமில்லை. உடை யைக் கழற்றி வேறு உடை தரித்துக் கொள். பிறகு பேசிக்கொள்ளலா மென்றார் அவன் தகப்பனார்.

இந்தச் சமயத்தில் பள்ளியிலிருந்து பாலன் வந்தான். தன் மாமன் அங்கிருப்பதைப் பார்த்ததும் குதித்துக் கொண்டே அவன் மடியில் ஏறி உட்கார்ந்து கொண்டான். அந்தக் குழந்தையைத் தூக்கி தன் மார்பு மீது சாத்திக் கொண்டு பிறகு கீழே இறக்கி விட்டான். தன் பெட்டியைத் திறந்து அவனுக்கு வாங்கி வந்திருந்த விளையாட்டுச் சாமான்களை எடுத்துக் கொடுத் தான். பையன் அவைகளில் ஈடுபட்டான். கமலத்திற்காக வாங்கி வந்தவை களை எடுத்துக் கொடுக்க முதலில் சிறிது அஞ்சினான். அவள் விரும்பாவிடில் என்ன செய்வது என்ற ஏக்கம். "கமலா, உனக்கென ஒரு சாமான்

கொண்டு வந்திருக்கிறேன். என் சக்திக்கு மேற்பட்டது. உன் அந்தஸ்துக்கு ஏற்றது எனவே எண்ணுகிறேன். தயவு செய்து அதனை ஏற்றுக் கொள்ள வேண்டும். வித்தியாசமாகக் கருதக் கூடாது'' என்றான். பதில் கூறாது கமலா அவன் பெட்டியைத் தூக்கி தன் பக்கத்தில் வைத்துக் கொண்டு அதிலிருந்த ஒவ்வொன்றையும் எடுத்து வைத்தாள். மேலாக இருந்தது வாசுவின் உடைகள். அதன் கீழ் காகிதத்தில் மடித்து வைக்கப்பட்டிருந்த சேலையை எடுத்தாள். ஜரிகை மின்னுகிறது. ஆவலுடன் அதனைப் பிரித்துப் பார்த்தாள். அவளுக்கு அந்தச் சேலை மிகவும் பிடித்திருந்தது. விலை அதிகமாயிற்றே.! ஜாக்கெட் துணிகள் இரண்டு இருந்ததையும் எடுத்துக் கொண்டாள். வாசனைப் புட்டிகளையும் எடுத்துக் கொண்டாள். சேலையை மறுபடியும் பார்த்தாள். அதன் பின்பு தன் தகப்பனாரிடம் அவைகளைக் கொடுத்துவிட்டு மறுபடியும் பெட்டியில் இருந்த மற்றொரு காகிதத்தால் கட்டப்பெற்றிருந்ததைப் பிரித்தாள். அதனுள் பாலனுக்காக வாங்கி வந்த துணிகள் இருந்தன. இவர்கள் தகப்பனார் எல்லாவற்றையும் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார். கமலா கொடுத்ததும், "சேலை நன்றாகத்தானிருக்கிறது. விலை மிகவும் அதிகமாயிருக்கும்'' என்றார். அவர் மனதில் இவைகளைக் கமலாவுக்கு வாங்கி வந்ததில் திருப்தி. அவள் மனம் மாறியதற்கு பணம் செலவானாலும் நல்ல பரிசு கொடுக்கவேண்டியது தான் என எண்ணினார்.

"இந்த மாதிரி புடவை நான் இதுவரை கட்டியதில்லை. இந்த ஊரிலும் யாரும் கட்டிக்கொண்டு நான் பார்த்ததில்லை. இதன் விலை ரொம்ப அதிகமா? அழகாக இருக்கும் இந்தப் புடவை கட்டிக்கொண்டால் என நினைக்கிறேன். செண்டு புட்டிகள் ஏன் வாங்கி வந்தாய்? அவை அவசியமில்லை. விளையாட்டுச் சாமான்கள் இவ்வளவு எதற்கு?'' என்றாள் கமலா. அவள் மனம் சேலையிலேயே இருந்தது. தன் கணவன் அங்கிருந்தால் உடனே கட்டிக் கொண்டிருப்பாள். அந்தச் சேலையின் மீது அவ்வளவு மோகம் கொண்டாள்.

"விலை ரொம்ப அதிகமில்லை. என் ஒன்றரை மாதச் சம்பளம் தான். மனதுக்குப் பிடித்தது வாங்கி வந்தேன். உன் மனதுக்குப் பிடித்திருந்தால் அதனை வைத்துக்கொள். நான் ஊர் சென்றஉடன் மறு சேலை ஒன்று வாங்கி யனுப்புகிறேன். எனக்கிருந்த பயம் ஒன்று நீங்கிப் போயிற்று. நீ வாங்க மறுத்தால் இந்தச் சேலையை என்ன செய்வது என்ற கவலையுடன் வந்தேன். இவ்வளவு மாறுதல் இதற்குள்ளாக எப்படி ஏற்பட்டது?''

"மாறுதல் ஒன்றுமில்லை. பழையபடியேதா னிருக்கிறேன். மனித சுபாவம் தெரிந்தது அவ்வளவுதான். கொஞ்சம் ஆகாரம் செய்துகொள். உடையை மாற்றிக்கொண்டு, நானும் இவைகளையெல்லாம் உள்ளே எடுத்து வைத்து வந்து விடுகிறேன்'' என்று கூறி உட்சென்றாள். வாசுவும் உடையை மாற்றிக் கொண்டான். கமலா திரும்பி வந்ததும், "எனக்கு ஆகாரம் இப்பொழுது தேவையில்லை. நீ மாறிவிட்டது தெரியாதபடியால் இங்கு எனக்கு ஒன்றும் கிடைக்காது என நினைத்து, வரும்பொழுதே சாப்பிட்டு வந்தேன். அவசரமாக ஒரு கடிதம் எழுதவேண்டும். நாளைக்கு என்னை மதுராபுரியில் எதிர்பார்ப்பார்கள். தபாலாபீஸ் இருக்குமிடம் தெரிந்தால் சொல். நாளை மறுநாள் இங்கிருந்து புறப்படுவதாக எழுத வேண்டு''மென்றான் வாசு.

"யாருக்குக் கடிதம் எழுத வேண்டும்? லீவு இருந்தால் எழுதிப்போட்டு ஒருவாரம் இங்கிருந்து போ. தபாலாபீஸ் போக வேண்டியதில்லை. அதோ இருக்கிற அறை என்னுடைய அறை. அதில் கடிதம், கவர் முதலியன வைத்திருக்கிறது. அவசியமானால் எழுதி அனுப்பு. யாருக்கு எதற்காக எழுதுகிறாய் என்பதைச் சொல்லலாமானால் சொல்'' என்றாள் கமலா.

# தாரண ஷு சித்திரைமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

. (இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | வி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 13 | 24 | 22 | 359 | 59·4 | 230 | 01 | 75 | 06 | 19 | 23 | 114 | 06 | 340 | 08 | 59 | 09 | 99 | 47 |
| 2 | 13 | 28 | 18 | 0 | 58 | 243 | 12 | 75 | 38 | 20 | 14 | 114 | 06 | 341 | 21 | 59 | 15 | 99 | 44 |
| 3 | 13 | 32 | 15 | 1 | 57 | 256 | 44 | 76 | 10 | 20 | 56 | 114 | 07 | 342 | 35 | 59 | 20 | 99 | 40 |
| 4 | 13 | 36 | 11 | 2 | 56 | 270 | 16 | 76 | 42 | 21 | 39 | 114 | 07 | 343 | 49 | 59 | 25 | 99 | 37 |
| 5 | 13 | 40 | 08 | 3 | 55 | 284 | 19 | 77 | 14 | 22 | 09 | 114 | 08 | 345 | 03 | 59 | 30 | 99 | 34 |
| 6 | 13 | 44 | 05 | 4 | 53 | 298 | 22 | 77 | 46 | 22 | 40 | 114 | 08 | 346 | 16 | 59 | 36 | 99 | 31 |
| 7 | 13 | 48 | 02 | 5 | 52 | 312 | 55 | 78 | 18 | 22 | 58 | 114 | 09 | 347 | 30 | 59 | 42 | 99 | 27 |
| 8 | 13 | 51 | 58 | 6 | 50 | 327 | 28 | 78 | 51 | 23 | 16 | 114 | 10 | 348 | 44 | 59 | 48 | 99 | 24 |
| 9 | 13 | 55 | 55 | 7 | 49 | 342 | 13 | 79 | 23 | 23 | 22 | 114 | 11 | 349 | 58 | 59 | 54 | 99 | 21 |
| 10 | 13 | 59 | 51 | 8 | 47 | 356 | 59 | 79 | 56 | 23 | 28 | 114 | 13 | 351 | 11 | 59 | 59 | 99 | 18 |
| | | | | | | | | | | (வ) | | | | | | | | | |
| 11 | 14 | 03 | 48 | 9 | 46 | 11 | 29 | 80 | 28 | 23 | 23 | 114 | 15 | 352 | 25 | 60 | 05 | 99 | 15 |
| 12 | 14 | 07 | 44 | 10 | 44 | 25 | 58 | 81 | 01 | 23 | 17 | 114 | 17 | 353 | 39 | 60 | 11 | 99 | 11 |
| 13 | 14 | 11 | 41 | 11 | 43 | 39 | 44 | 81 | 33 | 23 | 01 | 114 | 19 | 354 | 53 | 60 | 17 | 99 | 08 |
| 14 | 14 | 15 | 37 | 12 | 41 | 53 | 30 | 82 | 06 | 22 | 45 | 114 | 21 | 356 | 06 | 60 | 23 | 99 | 05 |
| 15 | 14 | 19 | 34 | 13 | 40 | 66 | 25 | 82 | 39 | 22 | 21 | 114 | 23 | 357 | 20 | 60 | 29 | 99 | 02 |
| 16 | 14 | 23 | 30 | 14 | 38 | 79 | 19 | 83 | 12 | 21 | 56 | 114 | 26 | 358 | 34 | 60 | 35 | 98 | 59 |
| 17 | 14 | 27 | 27 | 15 | 36 | 91 | 33 | 83 | 45 | 21 | 24 | 114 | 29 | 359 | 48 | 60 | 41 | 98 | 56 |
| 18 | 14 | 31 | 23 | 16 | 34 | 103 | 46 | 84 | 19 | 20 | 52 | 114 | 32 | 1 | 01 | 60 | 48 | 98 | 52 |
| 19 | 14 | 35 | 20 | 17 | 33 | 115 | 38 | 84 | 52 | 20 | 16 | 114 | 35 | 2 | 15 | 60 | 54 | 98 | 49 |
| 20 | 14 | 39 | 16 | 18 | 31 | 127 | 30 | 85 | 25 | 19 | 40 | 114 | 38 | 3 | 28 | 61 | 00 | 98 | 46 |
| 21 | 14 | 43 | 13 | 19 | 29 | 139 | 22 | 85 | 58 | 18 | 02 | 114 | 41 | 4 | 42 | 61 | 06 | 98 | 43 |
| 22 | 14 | 47 | 09 | 20 | 27 | 151 | 13 | 86 | 32 | 18 | 23 | 114 | 45 | 5 | 55 | 61 | 13 | 98 | 40 |
| 23 | 14 | 51 | 06 | 21 | 25 | 163 | 18 | 87 | 05 | 17 | 46 | 114 | 49 | 7 | 09 | 61 | 20 | 98 | 37 |
| 24 | 14 | 55 | 02 | 22 | 23 | 175 | 23 | 87 | 39 | 17 | 09 | 114 | 53 | 8 | 23 | 61 | 27 | 98 | 33 |
| 25 | 14 | 58 | 59 | 23 | 21 | 188 | 00 | 88 | 12 | 16 | 35 | 114 | 57 | 9 | 37 | 61 | 34 | 98 | 30 |
| 26 | 15 | 02 | 56 | 24 | 19 | 200 | 38 | 88 | 46 | 16 | 01 | 115 | 02 | 10 | 50 | 61 | 40 | 98 | 27 |
| 27 | 15 | 06 | 52 | 25 | 17 | 213 | 39 | 89 | 20 | 16 | 32 | 115 | 07 | 12 | 04 | 61 | 47 | 98 | 24 |
| 28 | 15 | 10 | 48 | 26 | 15 | 226 | 41 | 89 | 54 | 15 | 04 | 115 | 12 | 13 | 17 | 61 | 54 | 98 | 21 |
| 29 | 15 | 14 | 45 | 27 | 13 | 240 | 06 | 90 | 27 | 14 | 37 | 115 | 16 | 14 | 31 | 62 | 01 | 98 | 18 |
| 30 | 15 | 18 | 42 | 28 | 11 | 253 | 31 | 91 | 01 | 14 | 22 | 115 | 21 | 15 | 44 | 62 | 08 | 98 | 14 |
| 31 | 15 | 22 | 49 | 29 | 09 | 267 | 15 | 91 | 32 | 14 | 09 | 115 | 25 | 16 | 58 | 62 | 15 | 98 | 11 |

ஆகாயக் காட்சி:-
- 9௨ முன் இரவு மணி 9-02க்கு சசிக்கு வடக்கில் பா 2 வி 56ல் சுக்ரனும்,
- 11௨ பின் ,, ,, 2-10க்கு ,, ,, பா 7 வி 17ல் புதனும்,
- 14௨ மாலை ,, 7-14க்கு ,, ,, பா 2 வி 35ல் சனியும்,
- 15௨ நடு ,, ,, 12-28க்கு ,, ,, பா 4 வி 26ல் குஜனும்,
- 18௨ பின் ,, ,, 3-58க்கு ,, ,, பா 0 வி 30ல் குருவும்,

சந்திரன் நிற்கும் ரேகாம்சத்திற்கு நேராக வருகின்றன.

**பிரவேசங்கள் முதலியன:—** 1௨ காலை மணி 7-10க்கு சூர்யன் மேஷத்திற்கும். 10௨ காலை மணி 8-26க்கு சனி மிதுனத்திற்கும். 17௨ காலை மணி 10-35க்கு சுக்ரன் மேஷத்திற்கும், 30௨ காலை மணி 8-34க்கு குஜன் கடகத்திற்கும் பிரவேசிக்கின்றன. 10௨ புதன் வக்ர ஆரம்பம்; 12௨ புதன் பஸ்சாத் வக்ராஸ்தமனம்; 27௨ கிழக்கில் வக்ரோதயம்.

*** அயனாம்சம் பா-22 கலை-56 விகலை 49·2644 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.**

**† ராகு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.**

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

தாரணஞு சித்திரைமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1353, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1363

இங்கிலீஷ் 1944ஞு ஏப்ரல்மீ—1944ஞு மேமீ

| சித்திரை | ஏப்ரல் மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | வியா | பஞ்40-47 | கே38-23 | பி38-23சி | வருஷப் பிறப்பு |
| 2 | 14 | வெள் | சஷ்37-53 | மூல37-17 | அ37-17பி | கலை பயில |
| 3 | 15 | சனி | சப்34-13 | பூர34-48 | சித்60 | வர்த்தகம் செய்ய |
| 4 | 16 | ஞா | அ29-27 | உத்31-47 | அமி60 | யாத்திரை விலக்க |
| 5 | 17 | திங் | நவ24-11 | திரு28-13 | அ28-13சி | காவியஞ் செய்ய |
| 6 | 18 | செவ் | தச18-20 | அ24-37 | சி24-37ம | அப்பர் சுவாமி திருநட்சத்திரம், கரிநாள் |
| 7 | 19 | புத | ஏ12-09 | சத20-26 | சி20-26அ | வாருதினி ஏகாதசி |
| 8 | 20 | வியா | து6-11 | பூ16-13 | சித்60 | பிரதோஷம் |
| 9 | 21 | வெள் | திர0-11<br>சசி54-08 | உட்12-17 | சித்60 | மாஸ சிவராத்திரி, அவமாகம் |
| 10 | 22 | சனி | ●49-12 | ரே9-07 | பி9-07சி | அமாவாஸ்யை விரதம் |
| 11 | 23 | ஞா | பிர45-37 | அசு6-03 | சி6-03பி | வைசாக சுத்தம் |
| 12 | 24 | திங் | துதி42-35 | ப❊4-14 | சி4-14பி | கிருத்திகை விரதம் |
| 13 | 25 | செவ் | திரு40-13 | கிரு3-07 | சி3-11அ | |
| 14 | 26 | புத | சது39-37 | ரோ3-11 | சித்60 | |
| 15 | 27 | வியா | பஞ்40-11 | மிரு4-07 | மர60 | |
| 16 | 28 | வெள் | சஷ்41-25 | திரு7-12 | சித்60 | |
| 17 | 29 | சனி | சப்43-48 | புன10-47 | சித்60 | |
| 18 | 30 | ஞா | அ47-24 | பூச15-36 | சித்60 | |
| 19 | 1 | திங் | நவ52-13 | ஆ21-07 | சி21-07ம | |
| 20 | 2 | செவ் | தச5-36 | மக27-36 | சித்60 | |
| 21 | 3 | புத | ஏ66-00 | பூர34-13 | அமி60 | |
| 22 | 1944ஞு மேமீ 4 | வியா | ஏ3-03 | உத்40-47 | ம40-47சி | ஏகாதசி |
| 23 | 5 | வெள் | துவ7-11 | அ46-17 | அ46-17சி | பிரதோஷம் |
| 24 | 6 | சனி | திர10-47 | சித்51-01 | ம51-01சி | சித்ர குப்த பூஜை |
| 25 | 7 | ஞா | ச○13-13 | சு54-35 | சி54-35ம | சித்திரா பௌர்ணமி |
| 26 | 8 | திங் | பெ15-11 | வி57-00 | ம57-00சி | சுபம் விலக்க |
| 27 | 9 | செவ் | பிர16-13 | அ58-12 | சி58-12ம | வைசாக பகுளம் |
| 28 | 10 | புத | துதி15-07 | கே58-07 | சி58-07ம | ஆராய்ச்சிகள் |
| 29 | 11 | வியா | திரு13-12 | மூல56-53 | சித்60 | சங்கட சதுர்த்தி |
| 30 | 12 | வெள் | சது9-38 | பூ55-12 | பி55-12சி | மந்திரம் பயில |
| 31 | 13 | சனி | பஞ்5-26 | உத்50-03 | சித்60 | விருஷபரவி கா-51, வி-34 |

| சுக் | சூரி-புத | சனி | செ |
|---|---|---|---|
| | 10-மிது-சனி<br>17-மே-சுக்<br>30-கட-செவ்<br>31-ரிஷ-சூரி | | ராகு<br>குரு |
| கே | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயய் முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாக உண்டாக்கி ஒரு விதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினு லுண்டான பலவீனமும் இம்மருந்தினுல் நீங் கும். இரத்த விருத்தியை யுண்டாக்கி நரம்பு களுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரி யாது. களைப்பும் தோன்ருது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.



இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்கு களும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒரு முறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய துடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைத் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ் டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உப யோகித்த மாத்திரத்தில் சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கும்.

புட்டி 1-க்கு விலை அணு 4. தபாற்கூலி வேறு.

# கண்நோய் மருந்து



இது கண்நோய், கண்குத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல். சதை வளர்ந்திருத் தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இவை களில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத் தும். மாணுக்கர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச் சிறந்த ஔஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணுடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணு 10. தபாற்கூலி வேறு.

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னாலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாரு மில்லை
ஏன்மலடாய்ப் போவதென்று கேட்பா யாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
ஊன்மிகுந்தால் புழுதரித்தால் உதிரங் கெட்டா [ல்
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனாலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோறி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனாலும் கரு தரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் டை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.

# சீதபேதி (டிசென்டரி) பவுடர்



இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடிவயிற்று நோய் முதலான வியாதிகள குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

# குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானல் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும், குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் நேரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—0—0- தபாற் செலவு பிரத்தியேகம்.

கிடைக்கும்:- தனலட்சுமி கம்பெனி, தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

# சர்வமேக நிவாரணத் தைலம்




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளைகளிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊறிய மேக ரோகங்கள், மேக வாயு, தனுர்வாதம், முழங்கால் வாதம், குதிகால் வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரையோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், துடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சு போல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முதலியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், தேக இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்டாக்காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமாகிய உண்மையான மருந்து.

இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

# எலிக்ஸ்ரைன்

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது!!

*மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.*

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும். நாள்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, துர்நீர், மூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, லிங்கப்புண், லிங்கப் புற்று, மேகப் படைகள், உடம்பு ஊரல், அஜீரணம், மலச்சிக்கல், கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியாதிகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, யௌவனத்தைத் தரும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

**20-நாள் மருந்து 40-வேளைக்கு (பூரண குணத்துக்குப் போதுமானது) ரூபா 2-4-0**

# குன்மக் குடாரி

ஸ்டமக் பவுடர்:
ஆபரேஷன் தேவையில்லை:

சகலவித வயிற்றுவலியையும் **Appendicitis** என்னும் வயிற்றிலுண்டாகும் வியாதியையும், புண்களையும், வயிற்றை ஆபரேஷன் செய்யாமல் இம்மருந்து உத்தரவாதத்துடன் குணப்படுத்தும். இம்மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி தயார் செய்தது. (அல்சர்), அஜீரணம், மலபந்தம், குடலிரைச்சல், புளியேப்பம், வயிற்றுக்குத்தல், குடல்புண், ரணம், சதை வளர்தல், குலைக்கட்டி, ஈரலில் சதை வளருதல், குன்மம், சாப்பிடும் முன்னும் பின்னும் வயிற்றில் உண்டாகும் வலி இன்னும் பலவிதமான வியாதிகளையும் குணப்படுத்தும். **30-நாள் 60-வேளை மருந்து விலை ரூபா 2-8-0**

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**



பஞ்சாங்கங்களில் பெரும் பிரசித்தி பெற்று

தன்னிகரற்று விளங்குவது

# "ஆனந்தபோதினி"

## சுத்தத் திருக்கணித பஞ்சாங்கம்



## தாரண வருஷப் பஞ்சாங்கம்

தனியழகுடன் வெளிவந்து விட்டது

பஞ்சாங்கம் 1-க்கு விலை அணா 9

தபாற்கூலி அணா 1½

---

ஆனந்தபோதினி காரியாலயம்,

தபால் பெட்டி நெ. 167, சென்னை.



Edited, Printed and Published by N. Munisami Mudaliar, at the "Ananda Bodhini Press," No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.